

சுருதி யின்கண் முனிவரும் பின்னே
தூமொ ழிப்புல வோர்பலர் தாமும்
பெரிது நின்றன் பெருமை யென்றேத்தும்
பெற்றி கண்டுனே வாழ்த்திட வந்தேன்
பரிதி யே, பொருள் யாவிற்கு முதலே,
பானுவே, பொன் செய் பேரொளித் திரளே,
கருதி நின்னை வணங்கிட வந்தேன்;
கதிர்கொள் வாண்முகம் காட்டுதி சற்றே.



—பாரதியார்.




தனிப்பிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ: 12

ஜனவரி 1984

மலா 14

இதழ் 8



*சிறப்பாசிரியர் :*

**திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி**
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**

*துணையாசிரியர் :*

**திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

*அச்சிடுபவர் :*

**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

**பிரதிகளுக்கு :**

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road
TIRUPATI


# உள்ளுறை

# உங்களுடன்....

இந்து சமயத்தின் இறுதி இலட்சியம மனிதனை, அருவுருவமற்ற அந்தப பரமபொருளின பேரொளி யில கலக்கச் செய்வதேயாம் இந்நிலையினை அடைய அச்சமயம் தந்திட்ட வழி முறைகள பல. இவற்றினைக் கடந்து அப்பரமபொருளினைக் கண்டவர் சிலரே. அவர்களுள் அவர்கள் தம் இறையனுபவத்தினைத் தந்தவர் அதனினும சிலரே. ஆனால் அப்பரம்பொருள் கருணைக் கடலாயிற்றே அவ் இறை இன்பத்தினை பலரும அறிந் தின்புறும வகையில் தானே அச்சாதாரண மனிதனின் நிலைக்கு இரங்கி, இறங்கி வந்தான். இதறகு நம்மிடம இருக்க வேண்டிய ஒரே தகுதி 'நமபிக்கை' எனும் ஒன்றுதான் இறை உணர்வு சிறிதும இன்றிச் சுற்றித்திரிந்த கஜேந்திரனை முதலை ஒன்று, நீருக்குள இழுத்து அதற்கு யமனாக விளங்கிய போது 'முகுந்தா' எனறு அலறிய தருணத்து "தனக்கு இறுதி காபபு அவனே" என்ற அவ்யானையின் அந்த ஒரு கண நேர நமபிக்கைக்கு மதிப பளிக்கும வகையில், தன் பருந்தையும மறந்து பறந்து வந்த மாலவனின் கருணைத்திறம வியத்தற்குரியது.

மேற்கூறிய புராணச் செய்தியை - அது தரும பாடத்தினை மறந்து - ஒரு கதையாக எண்ணி, தன்னைத் தானே ஏமாற்றி அழியும் இன்றைய இருபதாம நூற்றாண்டு மனிதனுக்குத் தேவை காடசியும சாட்சியுமேயாம். ஆகவேதான், இந்து சமயம பரமபொருள் பற்றிய கருத்துக்களைக் கூறிய போதும், வானத்தில் இருக்கும கிரகங் களைப் பற்றி பல செய்திகளைச் செபபிய போதும், மனிதன் கூறியவனைப பார்த்து எள்ளி நகையாடினான் அவ்வாறு கிரகங்களைபபற்றி சமயம் கூறியபோது அவற்றில் சந்திரனையும், சூரியனை மட்டும் அமமனிதன் ஏற்றுக் கொண்டான். ஏனெனின் கண்ணுக்குக் காட்சி தரும் அவற்றையும அவன் மறுத்தானேயானால தன்னைப பெறறவளும தன்னை ஒரு 'மாதிரியாக' நினைத்துவிடப் போகிறாளே என்று அச்சத்தினால் தான் அவ்விரு கிரகங்களைப பறறி சமயம தந்திட்ட உண்மைகளை ஏற்க மறுத்த அவன், அவவுண்மைகளை விஞ்ஞானமும ஏறறுக் கொண்டபோது, அம மனி தன் சிறிதும நாணமின்றி வியபபெய்தினான

கண்களுக்குத் தெரியும் இரு சுடர்களில சூரியனுக்கு இந்து சமயம் தந்திட்ட பெருமையும், சிறபபும் வேதங்கள் மற்றும புராணங்கள மூலம் நன்கு அறியலாம். சூரிய வழிபாடு என்பது ஒரு குறிபபிட்ட சமயம் தந்திட்ட ஒன்றல்ல. அது ஒரு உலகப பொது வழிபாடு என்பதை கி மு. 1,400க்கு முன்பே சூரியனை மனித குலம் வழிபட்ட சரித்திரச் செய்தியே நமக்கு நன்கு விளக்கும். 'கர்ம சாக்ஷி'யான சூரியனைப பரபபிரமம ஸ்வரூபியாக வேதம பகரும். பதினெட்டுப புராணங்களும அப்பகலவனின பெருமையைப பேசும. பரிதியானவன் உதய காலத்தில் ருக்வேத ஸ்வரூபியாகவும, நடுவேனை உச்சி வேளையில் யஜுர் வேத ஸ்வரூபியாகவும, மாலையில் அஸத மன வேளையில் சாம வேத ஸ்வரூபியாகவும இருந்து உலகங்களின் ஆத்மாவாக விளங்கி, மண்ணுயிர்களின் உயிராகத் திகழ்ந்து வருகின்றான் என்பது நமது இந்து சமயம் தன் மந்திரங்களின் மூலமும, இலக்கியங்களின் மூலம தெரிவிக்கும் ஒரு ஒபபற்ற ஒரு மித்தக் கருத்தாகும்.

வாழ்க்கையின் தத்துவ இலக்கியத்தை கீதை' எனும செபபரிய பகுதியின் மூலம் தந்தது பாரதம். அதே போன்று, சூரியனின் ஆற்றலையும், புகழையும் 'ஆதித்யஹ்ருதயம்' எனும பகுதியின் மூலம் பரபபியது இராமாயணம். "ஒளிச்சுடர்களில் நான் சூர்யனாக இருக்கின்றேன்" என்று பின்னர் கூறிய தன் உண்மை ஒபபு தலுக்கு அச்சாரம தந்தது போன்று, அமமாதவன், தன்னுடைய இராமாவதாரத்தில் இராவணனைக் கொல்ல முடியாமற உள்ளத்தாலும, உடலாலும சோர்வுறறக் காலத்து அகஸ்தியர் அறிவுரைபபடி சூர்ய பகவானை வழிபட்ட பிறகே, தன ஒரே அம்பினால அவ்வரக்கனை அழித்த நிகழ்ச்சி அமைந்தது புருஷ ஸூக்தமும், காயத்ரியும், லலிதா சகஸ்ரநாமமும் சூரியனைப பற்றி கூறும் கருத்துக்கள் நமக்குத் தெரிவிபபது எனனவென்றால் உடலுக்கு ஆற்றலையும, அறிவுக்கு உணர்ச்சியையும், உயிருக்கு ஊக்கத்தையும், கண்ணுக்கு திடசன்யத்தையும தநது, அப பரமபொருளின் ஒரு தெய்வீகச் சின்னமாக இருந்து இம்மையிலேயே அமமறுமை வாழக்கை இன்பத்தினை அச் சூரியன் உணரச் செய்கிறான் என்பதுதான்.

வசு, ருத்ர, ஆதித்ய எனும பெயர்களில் நாம நம மூன்று தலைமுறைகளை வழிபடும வகையே அச் சூரியனின் பெருமையை நன்கறியச் செய்யும. அச்சூர்ய மண்டலத்தின் நாயகனை, காயத்ரி மந்திரத்தின் அதி தேவதையான சூர்யனே நான்கு கரங்களுடன் சூர்ய நாராயணனாக இபபுவனத்திறகுத் தன் பேரொளியான அரு ளொளியை வீசி வருகின்றான் என்பது ஸ்ரீ வேங்கடாசல மஹாத்மியம் நமக்குத் தெரிவிக்கும் கருத்தாகும்.

உலகத்தின் ஆக்கல் அளித்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும தலைவனாக விளங்கி, நமக்கு அவ்இறை நினைபபினை அவ்வபபோது உணர்த்திக் கொண்டு, ஆன்மிக சூழ்நிலைக்கு நம்மை இழுத்துச் செல்லும வகையில் தட்சணாயணத்திலிருந்து உத்தராயண திசைக்கு திரும்பும அப்பகலவனை உழைபபின் உருவமாக, நடமாடும் ஒரு தெய்வமாகக் கொண்டு, நம் செயலினைகள் யாவும தொலையும் வண்ணம், வரும் இம்மகர சங்கராந்தி அன்று அவனடி சரணடைவோமாக!



# செய்திச் சுருக்கம்





தி. தி. தே. ஆஸ்தான வித்துவான் ஸ்ரீ பண்டித வேதாந்தம் ஜகந்நாதாசார்யலு அவர்களுடன் தி. தி. தே. செயலாட்சித்தலைவர் திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி அவர்கள்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் ஆஸ்தான வித்வானாக ஸ்ரீ மகா வித்துவான் பண்டித வேதாந்தம் ஜகந்நாதாசார்யலு அவர்கள் 28 ஆண்டுகளாக இருந்து வருகிறார். இதனை முன்னிட்டு, அன்னார்க்கு அண்மையில் நடந்துமுடிந்த திருமலை பிரம்மோற்சவத்தின் போது, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் அவர்களால் பாராட்டு விழா நடைபெற்றது. 1894-இல் ஆந்திரா குண்ட்டூர் மாவட்டத்தைச் சார்ந்த செண்டோலில் பிறந்தார். சிறு வயதிலேயே வடமொழியில் தேர்ச்சி பெற்று, பின்னர் ஆகமம், அலங்காரம், பூர்வ மீமாம்ஸம் மற்றும் தர்ம சாஸ்திரங்களில் நன்கு புலமை பெற்றார். 1920-இல் பீடாபுரம் சமஸ்தானத்தின் 'ஆஸ்தான பண்டிதராக' விளங்கி சுமார் 17 வருடங்கள் அப்பதவியில் இருந்தார். 1955-இல் தி. தி. தேவஸ்தானத்தின் ஆஸ்தான பண்டிதராக அமர்த்தப்பட்டார். அது முதற்கொண்டு, தி. தி. தே. ஆதரவில் நடைபெற்ற சமய நிகழ்ச்சிகளை வெற்றியுடன் திகழக்காரணமாக விளங்கிவருகிறார். ''வேங்கடேஸ்வரா வைபவம்'' ''வைகானஸ கர்பசூத்ரம்'' போன்ற நூல்களை எழுதியுள்ளார். ஆந்திர மாநிலத்தின் ஆகம வித்யா பாடசாலையின் ''குலபதி'யாக' வும் விளங்கி வருகின்றார். 'வித்யா பூஷணா' 'வேதாந்த ரத்னா' 'ஆகம வித்யா சர்வபௌமன்' ''நியாய ரத்னா கர்ணா' போன்றன அவர் பெற்ற பட்டங்களில் சிலவாகும்.

ஃ ஃ ஃ

20-11-83 அன்று திருப்பதி பரகாலமடத்தில் ஸ்ரீ. உ. வே. டி. கே. கோபாலஸ்வாமி ஐயங்கார் தலைமையில், வித்வான்களும், கேந்திரிய ஸம்ஸ்க்ருத வித்யாபீட மாணவர்களும் ஸ்ரீ ஸூக்த பாராயணத்தில் அன்வயித்தனர். இந்த சமயத்தில் ஸ்ரீ. என. எஸ். வி ராகவன் அவர்கள் டாக்டர் கே. உஷாதேவி வெங்கடரமணராவ் உதவியுடன் நடத்திய இப்பாராயணத்தை தலைமை வகித்த ஸ்வாமி பாராட்டினார்., ஸ்ரீ ராகவன் அவர்களுடைய இடைவிடாத முயற்சியை அனைவரும் தங்கள் ஒத்துழைப்பினால் ஊக்குவிக்க வித்வான்களை ப்ரார்த்தித்தார். ஸ்வாமிகளுக்கு யதோசித ஸம்பாவனை செய்யப்பட்டது. பாராயண முடிவில் நிரவதிகமாக பகவத் ப்ரஸாதம் விநியோகிக்கப்பட்டது. ஓரியண்டல் காலேஜ் வித்வான்கள் ஸ்ரீ. உ. வே. திருவஹிந்த்ரபுரம், ராஜகோபாலாச்சாரியார் ஸ்வாமி, புதுக்கோட்டை சேஷாத்ரி ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. திருமலை தாதாச்சாரியர் ஸ்வாமி ஆகியோர் வந்திருந்து சிறப்பித்தனர். ★

# இசை வானில் புதியதொரு தாரகை

சிறிய வயது.

புதிய மேலைநாட்டு வாத்தியம்.

தூய கருநாடக இசையில் நல்ல புலமை

விஷயம் தெரிந்த வித்துவான்களையும் வியக்க வைக்கும் இன்னிசை.

சிறிதளவுகூடப் பிறழாத காலப் பிரமாணம் நிரம்பிய லயம்.

மனத்தைக் கட்டிப் போடும் குளுமை தவழும் வாசிப்பு.

மாபெரும் சங்கீத யோகி செம்மை வைத்தியநாத பாகவதரின் சிஷ்யப் பெருமகனார் திரு. ருத்ரராஜு சுப்பராஜுவின் அரிய கண்டுபிடிப்பு.

அவர்தாம் பச்சிளம் பாலகனான 'மாண்டலின்' மேதை சிரஞ்சீவி யூ. ஸ்ரீநிவாஸ்.

அவரது பூர்விகம் ஆந்திர மாநிலம், மேற்குக் கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த ஊர், பாலக்கோல். பிறப்பு கிழக்குக் கோதாவரி மாவட்டத்தில் உள்ள வேல் துருத்தி.

பரம்பரைச் சங்கீத குடும்பத்தைச் சேர்ந்த திரு. யூ. சத்ய நாராயணா, திருமதி சாந்தம்மா அவரை உலகிற்கு ஈந்து, பெருமை கொண்ட பெற்றோர்.

ஆறு வயதிலேயே செல்வன் ஸ்ரீ நிவாஸ் 'மாண்டலின்' வாத்தியத்தில் மெல்லிசை மெட்டுக்களை இனிமையாகவும் அனுயாசமாகவும் இசைத்து மகிழ்வது வழக்கம். பூர்வ ஜன்ம வாசனை என்பது இதுதானோ?

குடும்ப நண்பர் சங்கீத வித்துவான் திரு. சுப்பராஜு சிறுவனின் வாசிப்பைக் கேட்க நேர்ந்தது.

அதில் தென்பட்ட மேதை அவரைக் காந்தமெனக் கவர்ந்தது.







கருநாடக இசை நுணுக்கங்களைக் கற்பித்து, பெறற்கரிய அவ்வைரக் கல்லைச் சாணை பிடித்துப் பட்டை தீட்டினார் அவர்.

இசைப் பிரியர்களுக்குக் கிடைத்தது, கருநாடக இசையின் பூரிப்பு முழுவதும் பளீர், பளீர் எனச் சிந்தும் ஓர் இணையிலா, உயர்ஜாதி வைரம்.

அவருடைய முதல் கச்சேரி, குடிவாடாவில் நடைபெற்ற ஸ்ரீ தியாகராஜ சுவாமி இசைவிழாவில். எத்துணை பொருத்தம்!

பிரபல இசை இயக்குனர் திரு. எஸ். ராஜேசுவர ராவ் அவர்களின் வாத்தியக் குழுவில் இடம் பெற்று சென்னை இசை உலகிற்கு அறிமுகப் படுத்தப் பட்டார்.

சிறுவன் ஸ்ரீ நிவாஸின் இனிக்கும் இசையமுதை மாந்தி மாந்தி மகிழ்ந்த ரசிகர்களிடை உற்சாகம் கரை புரண்டோடியது.

அவருக்குக் கிடைத்த மாபெரும் வரவேற்பு இசை உலகில் அவருக்குக் கிடைத்த உயர்ந்த இடத்தை உறுதிப் படுத்தியது.

இனிமை பொங்கித் ததும்பும் அவரது நற்கீதத்தைப் பருகுவதற்கு இசைப் பிரியர்களுக்குத் தணியாத தாகம்.

அவர் எங்கு இசைப்பினும் அதைக் கேட்க ஏராளமான கூட்டம்.

மலேசியா, சிங்கப்பூர் பயணம் செய்து சென்றவிட மெல்லாம் வெற்றி வாகை சூடினார்.

மக்களிடையே அவர் எந்த அளவிற்கு விரும்பப்படுகிறார் என்பதற்கு அவருடைய ஓய்வே இல்லாத நிகழ்ச்சி நிரல் ஓர் எடுத்துக்காட்டு.

எளிமை, அடக்கம், அனைவரையும் தன் வயப்படுத்தும் சிறு நகை இவை அணிகலன்களாகத் திகழ, திருப்பதியில் அண்மையில் நடைபெற்ற தியாகராஜ சுவாமிகளின் 38 ஆவது ஆராதனை உற்சவத்தில், செல்வன் ஸ்ரீநிவாஸின் 'மாண்டலின்' இசையைக் கேட்ட நகர மக்கள் அனைவரும் தம்மை மறந்து அதில் சொக்கிப் போயினர் என்றால் அது மிகையே ஆகாது.

அவரது இசை மேலும் மெருகு பெற்றுப் பொலிய ஏழுமலையான் அருள் புரிவாராக.

மீனம்—திருப்பதி.

# குறுக்கெழுத்துப் புதிர்

சிறுவர் சோலை



திருமதி. விஜயா ரங்கராஜன்
வில்லிவாக்கம்.



| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | | | | | X | 3 | 4 |
| 5 | | | | X | 6 | X | | |
| 7 | | | | 8 | | | | |
| | 9 | | | | | X | | |
| 10 | | | | | | 11 | 12 | |
| | | 13 | 14 | | | | 15 | |
| | 16 | 17 | | 18 | | | | 19 |
| 20 | | | | | | | | |
| 21 | | X | | | 22 | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. சக்கரத்தாழ்வாருக்கு மறு பெயர்.
5. ஜவஹர்லால் வாழ்ந்த இல்லம் ஆனந்த ——
7. ஸ்ருதி —— புராணும் ஆலயம் கருணாகரம்;
8. நவராததிரியில் இவருக்கு மூன்று நாள் உண்டு.
9. முற்றும் துறந்த முனிவரை மரியாதையுடன் —— எனக் குறிப்பிடுவதுண்டு.
10. இராமாயணத்தில் விபீஷணனின் ——' சிறந்தது.
12. —— விதைத்தவன் —— அறுப்பான்.
13. 'ஸப்தகிரி' தமிழில் சிறிது மாறி உள்ளான்.
15. தற்போது காணப்படாத இதன்மீது பெருமாள் உற்சவங்களில் ஒரு நாள் புவனி வருவார்.
17. கோவில்களிலுல் இககலே வளர்ந்துள்ளது.
20. பெரியாழ்வாரின் வாழ்த்துப் பாடல்.
21. நீர்த் தேக்கமிடம்.
22. யாத்ரீகர்களுக்கு ——— திருப்பதியில். அதிகம் உண்டு.

### மேலிருந்து கீழ்

1. விரைவில் மங்களம் உண்டாக —— சீக்கிரம் என்பதுண்டு.
2. பிள்ளைப் பேறுக்குப் பலர் —— இருந்துள்ளனர்.
3. அம்மி மிதித்து —— பார்ப்பது திருமணத்தில் முக்கிய சடங்கு.
4. நரகாசுரனை வதம் செய்ததால் இப்பண்டிகை.
6. இலக்குமணனின் மனைவி.
9. சூடிக்கொடுத்த ஆண்டாள் அவதரித்த நாள்.
10. திருமாலின் கரத்தில் கொலுவுற்றிருப்பது.
11. —— வாழ்வாரே வாழ்வார் என்றார் வள்ளுவர்.
12. சுதந்திரத்துக்காக பல ——கள் பாடுபட்டனர்.
13. இந்த யாத்திரை புனிதமானது.
14. ——இகழ்ச்சி, என்பது முதுமொழி.
16. எல்லா உயிர்களிடத்திலும் —— கொள் என்பது பல மதங்களின் கொள்கை.
18. இதன் சொல்லுக்கும் பலன். இது விழுந்தாலும் பலன்.
19. சிவ விஷ்ணு ஆலயங்கள் நிறைந்த ஊர்.

(விடைகளுக்கு 8-ம் பக்கம் பார்க்க)

உலகில் பிறந்து பிறவிப்பிணியை களைந்து மற்றீண்டு வாராநெறிக்கு வழிதேட வேண்டிய மாந்தர்கள் உலகியலில் உழன்று உண்மையை மறந்து சிற்றின்பத்தில் ஈடுபட்டுப் பேரின்பத்தை மறந்து போகின்றனர். பேரின்பம் பெறுதலின் அவசியம் என்ன என்று சிந்திக்கும்போது, நாம் அடையும், அனுபவிக்கும் இன்பங்கள் அனைத்தும் ஒன்று துன்பங்களின் அடிப்படையாகப் பிறந்தவை; அல்லது துன்பத்தை அளிக்க இருப்பவை. எனவே மாறிமாறி வரக் கூடியனவே இன்பமும் துன்பமும். இவையற்று 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' எனும் நிலை தோன்ற வேண்டுமாயின் பரம்பொருளின் திருவடிகளையே எண்ணி உருகவேண்டும். கோபத்தால் தாய் குழந்தையைக் கவனிக்காதிருப்பினும் அதன் அன்பிற்கே ஏங்கும் குழந்தையைப் போன்று உருகவேண்டும். 'பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி ஆகியவற்றை ஒழித்து அதற்குமேல் மிக்க சுகமான அனுபவத்தை அடைந்தாலும் உலகளந்த எம்பெருமானுடைய திருவடிகளைத் துதிக்காத காலத்தில் உள்ள மறப்பெல்லாம் துயரமே என்றல்லாது வேறொரு வகையில் நினைப்பேனோ' என்று உருகுகின்றார் திருமங்கையாழ்வார். 'இப்பிறவி தப்பின் எப்பிறவி வாய்க்குமோ' என்பதை உணர்ந்து இந்த தேகம் கீழே விழுமுன் பேரின்பதை அனுபவிக்க வேண்டுமென்பது அருளாளர்களின் பேரவா.

காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்
அகண்டாகாரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ
இன்புற் றிடநாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாருஞ் சகத்திரே.

என்று அன்பு அழைப்பு விடுகின்றார் தாயுமானவர்.

உலக வாழ்வை வெறுத்து ஒதுக்கி எம்பெருமானே தஞ்சம் என்று அவனிடம் சரணடைந்தவர்க்கு அவனருள் காத்துநிற்கும் என்பது அருளாளர்கள் கூறும் உண்மை.

தாய் நினைந்த கன்றேஒக்க என்னையும்
தன்னையே நினைக்கச்செய்து
தான் எனக்
காய் நினைந்து அருள்செய்யும்
அப்பனை
அன்று இவ்வையகம் உண்டு
உமிழ்ந்திட்ட
வாயனை மகரக் குழைக் காதனை
மைந்தனை மதிள் கோவல்
இடைகழி
ஆயனை அமரர்க்கு அரியேறனை என்
அன்பனை அன்றி ஆதரியேனே
(பெரிய திருமொழி 7, 3, 2)

# வேம்பின் புழு

என்பது திருமங்கையாழ்வாரின் அமுதவாக்கு. நின்றாலும், இருந்தாலும், நடந்தாலும், தின்றாலும், பருகினாலும் அனைத்து செயல்களிலும் எம்பெருமாளின் திருவுருவை மனத்தால்கண்டு வாயால் பாடி கையால் துதித்து உடலால் வணங்கி வாழத்துவது அடியாரின் அன்புச்செய்கை. இறைவனை ஏத்தும் நாட்கள் இன்பம் நிறைந்த நாட்கள் என்றும், தொழாத நாட்கள் துன்பம் நிறைந்த நாட்கள் என்றும், பேசாத நாட்கள் பிறவாத நாளே என்றும் எண்ணினர். அவனது எண்ணம் முழுமையாக இருக்கும் வரை வாழ்வு நிலைபேற்றுடன் உண்டு; அவ்வெண்ணம் அற்றிடின் வாழ்வும் வீழ்ச்சியுறும் என்று அனுபவ வாயிலாக அறிந்தனர். "ஊசல் கயிறு அற்றால் பூமியில் சேர்வதேயன்றி வேறு துணை இல்லாமை போன்று எனக்கு உன்பாதமே அன்றி வேறு தாங்கும் துணை இல்லை' என்ற பொருளில்

உறுகயி றூசல் போல ஒன்றுவிட்
டொன்று பற்றி
மறுகயி றூசல போல வந்துவந்
துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு
சடையாய் பாதத்து
அறுகயி றூச லானேன் அதிகைவீ
ரட்ட னீரே

என்று அப்பர் பெருமானும்,

நன்னாரிற் பூட்டிய சூத்திரப
பாவைநன் னார்திப்பினால்
தன்னாலு மாடிச் சலித்திடு
மோவந்தத் தன்மையைப் போல்
உன்னாலி யானுந் திரிவதல்
லால்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோவிறை
வாகச்சி யேகம்பனே

என்று பட்டினத்தடிகளும் கூறுவ விருந்து இறைகளோடு இசைந்த இன்பம் பெற்றாலே நிறையான, நிலையான வாழ்வு கிட்டும். அஃதின்றேல் வாழ்வு வளம் பெறாது என்ற உண்மையை உணரலாம்.

Dr. R. கோபாலகிருஷ்ணன் M.A., Ph D,
சென்னை.

தெய்வத்தைத்தம் சித்தத்திலே வைத்து முழுமையாக உணர்ந்தவர்கள் வேறு எப்பொருளையும் தம் துணையெனக் கொள்ளார். இறைவனோடு இரண்டறக்கலந்து இன்புற்றிருக்கும் நிலையில் இருக்கவே இசைவர். இறைநினைப்பை ஒருக்கணம் மறப்பினும் அவர்க்குத்துன்பமே. இதனாற்றான் போலும் மணி வாசகப்பெருந்தகையும் 'இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க' என்றார் போலும். "தலையாய கற்பு மிகுந்த மாதராம் ஒருமை மகளிர் தம்மை மும்மை வாழ்க்கைக்கும் உறு துணையெனக் கைப்பிடித்த காதற் கணவரை நாடுதலின்றி அயல்வீட்டார் எவரையும் அந்நிலையில் வைத்து நாடுதல் செய்யார். (இதுவே நன்னெறியும் நல்லொழுக்கமுமாம்—அது போல்) அடியேங்களும், இன்ப நல்



## ஸப்தகிரி

வாசகர்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும், எழுத்தாளர்கட்கும் எங்களுடைய

**புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்**

—ஆசிரியர்.

வாழ்வினைத் தன் உரிமைச் செல்வமாகத்தந்தருளும் விழுமிய முழுமுதல்வனே நின் திருவடியன்றி வேறொரு தெய்வமுண்டெனக் கனவினும் கருதுதல் புரியோம். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பேரின்பப் பெருவாழ்வே'' என்று உருகுகின்றார் தாயுமானவர்.

இறைவன் ஆன்மாவை விரும்புகின்றான்; ஆன்மா இறைவனைத்தவிர வேறு எவரையும், எதனையும் பற்றவில்லை. இவண் யார் பெரியவர் என்ற வினா எழுகிறது; கொடுக்கல் வாங்கவில் பேரம் நடைபெறுகிறது, 'சங்கரனே! எனக்கு (மிகப்பெரியோனை) உன்னைத் தந்திருக்கிறாய்; (அதற்குப்பண்டமாற்றாக) மிகச்சிறியேனை என்னை ஏற்றுக்கொண்டிருக்கிறாய். நம்மிருவரில் இவ்விடயத்தில் யார் சாமர்த்தியசாலி? முடிவு என்பதே இல்லாத இன்பத்தை உன்னிடமிருந்து நான் அடைந்திருக்கின்றேன். இதற்கு ஈடாக நீ என்னிடமிருந்து பெற்றுக் கொண்டபொருள் யாது? எனது நெஞ்சையே கோயிலாகக் கொண்ட எம்பெருமானே! திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானே! எனது தந்தையே! ஈசனே! நீ என் உடம்பையே இடமாகக் கொண்டிருக்கிறாய். இந்த உபகாரத்துக்கு நான் செய்யக் கூடிய கைம்மாறு ஒன்றுமில்லை' என்கிறார் மாணிக்கவாசகர். குலசேகராழ்வாரும் தமது பெருமாள் திருமொழியில்,

நின்னையே தான்வேண்டி நீள்செல்வம்
வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும்
செல்வம்போல் மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவக்
கோட்டம்மா
நின்னையே தான்வேண்டி நிற்பன்
அடியேனே

*(பெருமாள் திருமொழி, 5, 9)*

என்று வேண்டுகின்றார்.

'வேம்பில் பிறந்த புழுவானது வேம்பையொழிய மற்றொன்றைத் தின்னாது. அதுபோல உனது அடியேனை யான் நீ அருள்புரியாவிடினும் உனது திருவடிகளையன்றி மற்றொன்றை விரும்பமாட்டேன். தேய்ந்து பருவம் நிரம்பாத சந்திரனுடைய சிறையை நீக்கி, ஐந்துதலை நாக அணையில் பள்ளி கொண்டிருக்கும் பரஞ்சோதி வடிவனான பரம்பொருளே' என்ற பொருள் கொண்ட பாடலைப் பாடுகின்றார் திருமங்கையாழ்வார்.

வேம்பின் புழு வேம்பன்றி
உண்ணா(து) அடியேன்
நான் பின்னும் உன்சேவடி
அன்றி நயவேன்
தேம்பலி ளந்திங்கள் சிறை
விடுத்து ஐவாய்
பாம்பின் அணைப் பள்ளி
கொண்டாய் பரஞ்சோதி.

*(பெரிய திருமொழி 11, 8, 7)*



### குறுக்கெழுத்துப் புதிர் விடை

| இடமிருந்து வலம்: | மேலிருந்துகீழ்: |
|---|---|
| 1. சுதர்சனர் | 1. சுபஸ்ச |
| 5. பவனம் | 2. தவம் |
| 7. ஸ்மிருதி | 3. அருந்ததி |
| 8. துர்கை | 4. தீபாவளி |
| 9. பூஜ்யர் | 6. ஊர்மிளை |
| 10. சரணாகதி | 9. பூரம் |
| 12. தினை | 10. சங்கு |
| 13. (ஏமலைமு) ஏழுமலை | 11. உழுதுண்டு |
| 15. யாளி | 12. தியாகி 13. காசி. |
| 17. சிற்பம் | 14. ஏற்பது |
| 20. திருப்பல்லாண்டு | 15. கருணை |
| 21. அணை | 18. பல்லி |
| 22. விடுதி. | 19. காஞ்சி. |

# ஆண்டாளின் அமுத வாக்கு

திரு. ஆர். பக்தவச்சலம்,
M A; M.Ed; P G D H E
குடியேற்றம்.

அலகிலா விளையாட்டுடைய ஆண்டவனின் பக்தி வெள்ளத்திலே தம்மை மறந்து ஆழ்பவர்களே "ஆழவார்கள்" எனப்படுவர். அத்தகையவர்களில் ஒருவரே நம்மையெல்லாம் ஆண்ட ஆண்டாள் நாச்சியார். இவர் அரங்கத்தம்மானுக்குப் பாமாலை, பூமாலை ஆகிய இருமாலைகளைச் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாவார். இவ்வமமையார் அருளிச் செயத "திருப்பாவை"ப் பாடல்கள் அகிலம் போற்றும் அற்புதப் பாடல்களாகும்.

இப்பாடல்கள் முப்பதும் கற்பகச் சோலை போன்றவை எனலாம். கடலில ஆழமாகச் செல்லச் செல்ல அழகிய முத்துக்கள் கிடைப்பது போல, இப்பாடல்கள் ஆழ்ந்து நோக்குவார்க்கு அரிய கருத்துக்கள் பல புலனாகும். இங்கே, திருப்பாவைப்பாடல்கள் முப்பதில், மூன்றாவது பாடலைப்பற்றி ஆழ்ந்து சிநதிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும். பாடல்,

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாஙகள் நம் பாவைக்குச் சாறறி
நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்
மாரி பெயது
ஓஙகு பெருஞ் செந்நெலூடு கயல்
உகளப
பூங்குவளைப் போதில் பொறிவண்டு
கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலை
பற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல
பெரும பசுக்கள்
நீங்காத செலவம் நிறைந்தேலோ
எம்பாவாய்.

இப்பாடலில் "பூங்குவளைப் போதில் பொறி வண்டு கண்படுப்ப" எனும் அற்புத வரியே நம்மைச் சிந்தனையில் ஆழ்த்துவதாகும்.

இறைவன தங்குமிடம் நம்முடைய மனமாகும. "திரையற்ற நீர் போல (அலையற்ற நீர் போல) சிநதை தெளிவார்கரு புரையற்றிருந்தான் புரிசடையோன", எனறும்; "உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்" என்றும் திருமூலர் கூறுவது சிந்திககத் தக்கதாகும்.

"நிணியான மனோசிலை மீதுனதாள
அணியாா அரவிந்தம் அருமபுமதோ"

என்பது முருகனருள் பெற்ற அருணகிரியாரின் அருள் வாக்கு. சேற்றில் தான் செநதாமரை தோன்றும. கல்லின்மீது தாமரை மலருவதில்லை. அதுபோல, நம்முடைய மனம் கல்லாக இருந்தால் இறைவனுடைய பாதத்தாமரை தோன்றாது. மனம் அன்பினால் குழைநதும், இரக்கத்தால் இளகியும (சேறு போல) இருக்க வேண்டும். இப்படிப்பட்ட இளகிய மனதில்தான் இறைவனுடைய பாதமாகிய தாமரை மலர் தோன்றும்.

மனம் குழைதல் அல்லது இளகுதல் என்றால் என்ன? என்பதை நம்மில் பலர் அறிவதில்லை. ஆண்டவனின் பிரதி பிம்பங்களாக இவ்வுலகில் நடமாடும் தெய்வங்களாகிய ஏழைகளின் பால் இரக்கம் கொணடு, மனம், மொழி, மெய இவற்றினால் அவர்கட்கு உதவுதலே அகங்குழைவதின் அடையாளமாகும். இந்நிலையை வடலூர் வள்ளற் பெருமான் திருவாக்கால் தெள்ளத் தெளியலாம்.

வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம்
வாடினேன் பசியினால் இளைத்தே
வீடு தோறிரந்தும் பசியறாது அயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின்றோர் என்
நேருறக் கண்டுளந் துடித்தேன
ஈடின் மாணிகளாய் யேழைகளாய
நெஞ்சு
இளைத்தவர் தமைக்கண்டே இளைத்
தேன்.

அற்றாக்கும் அலர்ந்தார்க்கும் அருள் உள்ளம் கொண்டு பொருளுதவி செய்ய வேணடும். அடுத்தவர் படும் துன்பங்கண்டு நமது துன்பமாக ஏற்று அததுனபங்களைக் களைய முறபடுதல் வேண்டும். ஆக்கைக்கே இரைதேடி அலமந்து முடிவில் காக்கைக்கே இரையாகிக் கழியும் இவ் இழி செயலை விட்டு ஒழித்தல் வேண்டும். ஆன்ம நேய ஒருமைப் பாட்டை அனுபவத்திற்குக் கொணடு வருதல் தான் அன்பினால் அகம் குழைவதின் அடையாளமாகும்.

ஆணடவன் அரசாட்சி செய்யுமிடம அடியார்களின் மனமே என்பது இருமாலை சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள் நாச்சியாரின் அமுதமொழியாகும். நம்முடைய மனம் குவளை மலராக மலர்ந்து, விரிந்திருக்க வேண்டும். அம்மலரில் 'அன்பு' எனும் தேன் நிறைந்திருக்க வேண்டும். 'அருள்' எனும் மணம் வீசுதல் வேண்டும்.

இறைவன் எனும் பொறிவண்டு, அடியார்களின் மனமாகிய குவளை மலரில் உள்ள அன்பெனும தேனைப் பருகவும், அருள எனும் வாசனையை நுகரவும் தேடி வரும்.

தேனும், வாசனையும் நிறைந்த மலர்களைத் தேடி வண்டுகள் வருவது தான உலக நியாயமாகும். அஃதல்லாது, மலாகள் வணடுகளை நாடிச் செல்வது எங்ஙனுமில்லை. எனவே மனமாகிய பூங்குவளைப் போதில், இறைவனாகிய பொறிவணடு கண்படுத்தல் வேண்டுமெனில் நாம் செய்ய வேணடியவை யாவை?

ஓங்கி உலகளந்த உத்தமன் பெயரை வாயாரப் பாட வேண்டும். ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கைத் தூயோமாய்த் தூமலர் தூவித் தொழுதல் வேண்டும்; ஐயமும் பிச்சையும் ஆந்தனை

# சூரியன்

திரு. வி. வெங்கட நாராயணன்-மணலூர் பேட்டை.

சூரியன் நவககிரஹங்களில் ஒன்று. தன கிரணங்கள் மூலம் உலகுக்கு ஒளியைக் கொடுககிறது.

சூரிய வெப்பத்திஞலேயே நீர் நிலைகளிலுள்ள நீர் ஆவியாகி மேகமாகிறது. மேகம மழையைப் பெய்விக்கிறது. மழைக்கு மூல காரணமாய் விளங்குவது சூரியன்.

''ஞாயிறு போறறுதும ஞாயிறுபோறறுதும
காவிரிநாடன திகிரிபோல் பொறகோடடு
மேரு வலந்திசிதலான''

என சூரியனைப் பற்றி சிலப்பதிகாரம் செப்புகிறது.

சம்ஹிதை நூல்களும, உபநிஷதங்களும் சூரிய நாராயணனைக் குறிப்பிட்டுப் போற்றுகின்றன.

வருடத்தில் பன்னிரண்டு மாதங்களில் ஆட்சி செலுத்துபவாகள் பன்னிரு ஆதித்தியர்கள் எனக் குறிப்பிடப்படுகின்றனர். பகவத் கீதை யில் 'பன்னிரண்டு ஆதித்தியர்களில் நானே சிறந்தவன்; நானே சூரியன்' என கண்ணன் கூறுகிருர். பித்ருவர்கங்களில் பிரபிதாமகர் ஆதித்ய ரூபம் என வரிக்கப்படுகிருர்.

சூரியனின் கிரணங்கள் நோய் தீர்க்கும ஆற்றலுடையவை. சூரிய நமஸ்காரம உடலுக்கு ஆரோக்கியம் தரவல்லன.

மஹா விஷ்ணுவின் அவதாரமாகிய இராமபிரான் வம்சமும், அரிச்சநதிரன், மற்றும் சோழ அரசாகளின் வம்சமும் சூரிய குலம் என அறியப்படுகிறது

மயூரன் என்ற கவிஞன் கி. பி. ஏழாம் நூறறுணடில் ''சூரிய சதகம'' என்ற நூலை இயற்றினன். மயூர கவியின் சூரிய சதகப் பாசுரங்கள் காஞ்சிபுரம் கச்ச பேசுவரர் ஆலயக் கல்வெட்டில் காணப் படுகிறது.

கி. பி. பத்தாம நூற்றுண்டுக்குப் பிறகு கட்டப்பட்ட கோவில் களில் கங்க அரசன் நரசிம்ம தேவர் கொஞரக்கில கட்டிய ''கதிரோன் கோயில்'' தனிச் சிறப்புடையது. இககோயில் பெரும் தேர்போல் அமைக்கப்பட்டுள்ளது. திருமாலுக்குரிய சங்கமும் சக்கரமும் அணி கலன்களுடன் பதுமபீடத்தில சூரிய நாராயண சிற்பம் கொஞரக் ஆலயததில் காணப்படுகிறது.

கி பி. பத்தாம நூற்றுணடில முதல பராநதக சோழன் தென் ஞற்காடு மாவடடததில் ஐம்பை கிராமத்தில் சூரியனுக்கு ஆலய மெடுத்து ''ஸ்ரீ கண்டராதித்ய ஆதித்யகிரஹம்'' என்று பெயர் சூட்டி யதை சாசனம் கூறுகிறது.

குலோத்துங்க சோழஞல் நிர்மாணிக்கபபட்ட தஞ்சை மாவட் டம் சூரியஞா கோவில் புகழ்பெற்றதாகும. சூரியஞர் கோவில் மூல வரை ''குலோத்துங்க சோழ மாாத்தாண்டாலயத்து சூரிய தேவர்'' என ஆலயக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

உலகத்து உயிர்களை வாழ வைக்கும் சூரியனுக்கு ஒவ்வொரு தமிழ் ஆண்டும் தை மாதம் முதல் நாள் மகர சங்கராநதி தினத்தில் பொங்கலிட்டு வழிபடுவது தொன்று தொட்டு வழக்கத்தில் இருநது வருகிறது.

யும் கைகாட்டி, உய்யுமாறு எண்ணி அவன் திருப்பாதங்களை மனதிஞல் இறுகப் பற்றுதல் வேண்டும. மேலே கூறிய வழியில நடந்து காட்டியவா களே நாயன்மார்களும், ஆழ்வார் களும் ஆவார்கள்.

வைகை நதிக்கரையில் நின்று கொணடு, ஒங்கி உலகளநத உத்தமன் புகழினை யாழ்கொண்டு பாடிக்கொண் டிருந்தார் திருப்பாணுழ்வார். இந்த உலகச் சிந்தனை சிறிதுமின்றி சித்தத் தைத் திருமாமகள் கேள்வன் மீதே வைத்துப் பரவச நிலையுற்றிருந்தார் ஆழ்வார்.

லோக சாரங்கயர் எனும் அரங்க நாதனின் அடியார் கல் கொண்டு திருப்பாணுழ்வாரை விலகும் பொருட்டு வீசிஞா. அக்கல் ஆழ் வாரை மட்டுமன்றி, ஆழ்வாரின் அகத்தில் குடிகொணடிருநத அரங் கனையும காயப்படுத்திற்று.

இதை அறியாத லோக சாரங்யா தீர்த்தத்துடன் அரங்கனின சன னதிக்குள் அடி வைத்தாா. பசசை மாமலை போல் மேனியை உடைய அரங்கனின் நெற்றியில் உதிரம் பெருகுவதைக் கண்டு உள்ளம் தடு மாறிஞர்.

லோக சாரணயர் கல் எறியும் பொழுது, குவளை மலர் போன் றிருந்த திருப்பாணுழ்வாரின் அகத் தில் அரங்கன் அமர்ந்திருந்தால் அல்லவா அவனையும் அக்கல் காயப் படுத்திற்று? இதிலிருநது நாம் அறி வது யாது?

உள்ளன்பில்லாமல காடே திரிந் தும், கந்தை சுற்றி ஒடே எடுத்தும் பயனில்லை. ஆண்டவனைத் தேடி அலைய வேணடிய அவசியமில்லை; ஆண்டவன் வணடு போன்றவன். நமது மனம் கல்லாக இல்லாமல், குவளை மலராக இருக்குமேயாஞல், ஆண்டவஞகிய வண்டு நம் மனத்தைத் தேடி ஓடிவரும் என்பதில் ஐயமே இல்லை. பிறகு நமக்குத் துன்பம் ஏது? நம் துன்பம் அவனது துன்ப மாகி விடுகின்றது. இன்பமே நமககு, எநநாளும் துன்பமில்லை.

எனவே, அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையை, அன்பிஞல் அகத்திருத்தி அருள் பெறுவோம்; அவனடி அடைவோம். 

# கோயில் வளர்ந்த கதை

டாக்டர். ஏ. வி. ஜயசந்திரன்,
சென்னை.

**ஆகம கோட்பாடுகள் :**

ஆலயத்தின் கட்டிட அமைப் பினைப் பற்றியும் படிமங்கள் முதலி யன பற்றியும் கூறும் சிற்ப நூற்கள் பல உள. ஆயினும், ஆகமங்கள் தம் தம் சமயங்களுக்கு ஏற்றவாறு கோயில்கள் அமைக்கும் முறையினை விளக்குகின்றன. பல வகையான சிற்ப நூற்களில், தென்னகத்துப் பாணியினைத் தெளிவாக விளக்கும நூற்கள் மயமதம், மானசாரம், காசியபம், பிராம்மியம், சாரஸ்வதீயம், சில்ப ரத்தினம், சகலாதிகாரம் போன்றவை. வட இந்திய பாணி யினை விளககும் நூற்கள் சமராங்கன சூதரதாரா, அபராஜித பிரச்சா என் பவை.

ஆகமங்களை மூன்று வகையாகத் தொகுத்துள்ளனர்: அவை சைவ, வைணவ சாகத ஆகமங்கள். சைவ ஆகமங்கள் சிவனையும், வைணவ ஆக மங்கள் விஷ்ணுவையும், சாக்த ஆக மங்கள் சக்தியினையும் முழு முதற் பொருளாகக் கருதுகின்றன.

**சாக்த ஆகமங்கள் :**

சாக்த ஆகமங்களைத் தந்திரங்கள் எனவும் பெயரிட்டு அழைப்பர். அவை 64 என கர்ண பரம்பரைச் செய்திகள் கூறுகின்றன. சாக்த ஆகமங்களை இரு வகையாகக் கருது வர். ஒன்று, தட்சிண ஆகமங்கள் என்றும், மற்றொன்று, வாமாசார ஆகமங்கள் என்றும் கொள்வர். தட் சிண அல்லது சமயாசசார ஆகமங கள் தேவியினை இனிய முறையாக வழிபடும் மார்க்கங்களைப் போதிக் கின்றன. வாமாசார ஆகமங்கள், பலி முதலிய அருவெறுக்கத் தக்கப் பிரயோக மார்க்கங்களினைப் போதிக் கின்றன.

**வைணவ ஆகமங்கள் :**

வைணவ ஆகமங்கள், பாஞ்சராத் ரம், வைகானசம் என இருவகைப் படும். பாஞ்சராத்ர ஆகமங்கள் மூன்று வகையாகத் தொகுக்கப் பட்டுள்ளன: 1. திவ்யம்: நாராயண னால் நேரிடையே வழங்கப்பட்ட ஆக மங்கள். சாத்வத சம்ஹிதை, பௌஷ்கர சம்ஹிதை, யாக்ய சம்ஹிதை இந்தப் பகுதியில் சேர் வன. 2. முனிபாஹித: முனிபுங்க வர்களால் தொகுக்கப் பட்டவை. அவை, பாரத்வாஜ சம்ஹிதை, பாரமேசுவர சம்ஹிதை, பாத்ம சம் ஹிதை, நாரதீய சம்ஹிதை, விச்வக் சேன சம்ஹிதை போன்றவை. 3. ஆப்த மனுஜப் புரோகத: நம்பக் கூடிய சமயத் தலைவர்களால் இயற் றப்பட்டவை எனப் பொருள்படும். பாஞ்சராத்ர ஆகம நூற்கள் 225 என இதுவரை கூறப்பட்டு வருகின் றன. இவற்றில் அநேகமாக 200 நூற்கள் கிடைத்துள்ளன.

வைகானச ஆகம நூற்கள் நால் வர்களால் இயற்றப்பட்டவை. இந் நால்வர்களான மரீசி, பிருகு, காசி யபர், அத்ரி மகிரிஷிகள் விகநச முனி வரின் சீடர்கள் ஆவார்கள். குரு வான விகநசர் சூத்திரங்கள் எடுதது ஓத, சீடர்கள் ஆகம நூற் கள் புனைந்தனர். மரீசியின் நூற்கள் யாவும் கப்பங்கள் எனவும், பிருகு வின் நூல்கள் அதிகாரங்கள் என வும், காசியபரின் நூற்கள் காண்டங் கள் எனவும், அதரியின் நூற்கள் அதிகரணங்கள் எனவும் அழைக்கப் பட்டன.

**சைவ ஆகமங்கள் :**

சைவ ஆகமங்கள் நான்கு வகைப் படும்: காபாலம், காலாமுகம், பாசு பதம், சைவம் முதலியன.சைவ வகை மேலும் இருவகையாகும்: 1. காஷ் மீர்ச் சைவ ஆகமங்கள்;2. சித்தாந்த சைவ ஆகமங்கள் என்பன. சித்தாந்த ஆகமத்தினைச் சேர்ந்தவை 28 நூற் கள். அவை: காமிகம், யோகஜம், சிந்த்யம், காரணம், அஜிதம், தீப் தம், சூட்சமம், சகஸ்ரம, அம்சுமத், சுப்ரபேதம், விஜயம், நிச்வாசம், ஸ்வாயம்புவம், அநலம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந் திரக்ஞானம், முகபிம்பம, பிரோத் கீதம, லலிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தமம், பாரமேசுவரம, கிரணம், வாதுலம்.

ஒவ்வொரு ஆகமத்துக்கும் உப ஆகமங்கள் உள. அவ்வாறு, 107 உப ஆகமங்கள் வழக்கில் உள. ஆக மங்களில் முதல் 10 'சிவபேதம்' எனவும் எஞ்சிய 18 'ருத்திர பேதம்' எனவும் அழைப்பர். ஒவ்வொரு ஆகம நூலிலும், தந்திராவதார பட லத்தில், ஆகமத்தின உப ஆகமங் கள பற்றியும், ஆசிரியா, சீடர் முதலியவர்கள் பறறியும் குறிபபுக் கள இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு சைவ ஆகமமும் நான்கு பிரிவுகட் குட்படும். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. சரியாபா தம் என்பது நால்வகை வர்ணத்தார், சிவபூஜைக்குச் சேர்க்க வேண்டிய பொருள்கள் பற்றியும், ஒழுக்கம், பூஜை முதலியன பற்றியும் விளக் கும். கிரியா பாதத்தில் தீட்சை களின வகைகளும், சிவ பூஜைக்கு வழி கோளலும், ஆலயங்களுக்கு இடம் தேடி, கூட்டிடம் உருவாககி, அருவுருவத திருமேனியினைக் கடவுண மங்கலம் செய்வது, குறைகள் ஏற் படின் நிறைவு படுத்துவது முதலி யனவும் பேசப்படும். யோக பாதத் தில், சிவயோக நிலை பெறறு, துரியா தீதம் அடைந்து, காணும் இனபத் திற்கு வழி முறையினை விளக்குகிறது. நான்காவது பகுதியாகிய ஞான பாதத்தில் பசு, பதி, பாசத் தொடர் புகள் பற்றி விளக்கம் காணலாம்.

சிற்ப நூற்களிலும் பூமி சோதனை முதலிய பரிசைஷகள் இருப்பினும், பொதுவாக அவை பேசப்படுகின்றன.

## ஆலயத்திற்கு ஏற்ற பூமி:

மயமதம் என்ற சிற்ப நூல் ஆலயங்கள் கூட்டுவதற்கு ஏற்ற இடமென்றும் நீக்க வேண்டிய இடமென்றும் வகைப்படுத்துகின்றது. சிறந்த இடத்தினைக் குறிக்கப் பிராமண பூமி எனவும், அதற்கடுத்த இடங்களாக க்ஷத்திரிய, வைசிய, சூத்திர பூமியென வகைப்படுத்துவர். சோதனையில் கவனிகக வேணடியவை, பூமியின நிறம, மணம், சுவை, உருவம், திக்கு, சப்தம், தொடு உணர்ச்சி (தொட்டுப் பார்த்தால் தோன்றுவது) முதலியன.

சதுரமாகவும், வெண்மை நிறம் கொணடு, அத்தி முதலிய மரங்கள அடர்நது, துவர்ப்பு, இனிப்பு இவை இரணடும் கலந்து விளங்கும் சுவை உடையதாகவும் இருந்தால், அது, மிகச் சிறந்த இடமாகும். இப்பூமி வடககே தணிந்திருக்கும்.

இதற்கடுத்தது, சிவப்பு நிறமுடைய பூமி. இது அகலத்தைக் காட்டிலும் எட்டில் ஒரு பங்கு நீளமுடையதாக இருக்கும்; கிழககே தணிநதிருக்கும். இப் பூமியில் அரச மரமிருககும். எப்போதும எல்லா நலங்களையுமுடைய பூமியாக விளங்கும்.

மூன்றாவதாய் விளங்கும் பூமி அகலத்தைவிட ஆறில் ஒரு பங்கு நீளமுள்ளது. மஞசள் நிறமானது. புளிப்பு ருசியுள்ளது. இரளி மரம அதிகமாக விளங்குவது. கிழக்கில் தணிந்துள்ளது.

நான்காவது, அகலத்தைவிட நாலில் ஒரு பங்கு அதிக நீளமுள்ளது. கிழக்கில் தணிந்திருப்பது. கருமை நிறமுடையது. உறைப்புச் சுவையும் ஆலமரங்களும் விளங்கும். தன தானிய விருத்தி உடையது.

பொதுவாக நீணட சதுரமுடைய பூமி சிறப்பானது. குதிரை, யானை, மூங்கில், வீணை, சமுத்திரம், துந்துபி வாத்யம் போன்றவைகளின் சப்தமும், புன்னை, ஜாதி முல்லை, தாமரை, தானியம, பாதிரிப்பூ, பசு முதலாமவற்றின் மணமும், எல்லா விதைகளும போட்டால் விளையக் கூடிய தரமும் கொண்ட பூமி சிறப்பானது.

ஒரே விதமான நிறமும், அழுதத மும், பசையும், தொட்டால் இன்பமான உணர்சசி ஏற்படுவதுமான பூமி சிறநதது.

வில்வம், வேம்பு, நொச்சில், மருதம், ஏழிலைப் பாலை, கட்டி மாமரம் முதலிய ஆறுவித மரங்கள் விளையக் கூடியது சிறப்பான பூமி.

நீர் நிலையில், நீர் பிரதட்சிணமாக ஓடடமுடையதாக இருந்தால் அது ஏறகத்தகக பூமியாகும்.

(தொடரும்)

# 'ஒன்று'மே தொழுவோம்!

**திரு. இரா. சுகராஜ்-சென்னை.**

எனது நணபர் தன்னை அவர் ஆத்திகர் என்று அழைத்துக் கொள்ள விரும்புவதில்லை. 'எனக்குக் கோவில், குளம், தலம்' மூர்த்தி, தீர்த்தம் இதெல்லாம் பிடிக்காது' என்று கூறுவார் அவர். 'ஆனால் நான் வருடத்துககு ஒரு முறை திருமலை-திருப்பதிக்குச் செனறு வருவேன். அந்த ஒன்று-ஒன்றுக்கு மட்டுமே சென்று வருவது என் வழககம். இதனால் என்னைப் பக்திமான் என்று நீங்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது. மரணப்படுக்கையில் என் தந்தையின் கட்டளை. அதை நிறைவேற்றி வருகிறேன'' என்றார் நண்பர். "உங்கள் தநதை இட்ட கட்டளை மிகச் சரியானது. நீஙகள் எந்தக் கோவிலுககும் போக வேண்டாம். தலத்துக்கும் போக வேணடாம். தீர்த்ததிலும் நீராட வேண்டாம். ஒனறே ஒன்று. திருவேஙகட மாமலை ஒன்றை-ஒன்றுமே தொழுது வருகிறீர்களல்லவா? அது போதும். நீங்கள் நாத்திகரே ஆனாலும் உங்களுககு 'வினை' பந்தம் இல்லை. வீடுபேறு நிச்சயம்' எனறேன.

'என்னை ஆத்திக வலைக்குள் பிடிக்கப் பார்க்கிறீர்களா?' என்றார் நண்பர். 'இது நான் சொல்லும் வார்த்தையல்ல. தமிழ் மாறன். வேதத்தைச் செநதமிழில் விரித்துரைத்த நம்மாழ்வாரின் வார்த்தை, வாக்கு மூலம்' என்றேன். நணபர் இலக்கிய உள்ளம் படைததவர். திருவாய் மொழிப் பாசுரத்தைச் சொன்னேன்.

"குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன்
அன்று ஞாலம் அளந்தபிரான்-பரன
செனறு சேர் திருவேங்கட மாமலை
ஒன்றுமே தொழநம்வினை ஓயுமே" (திருவாய்மொழி-2926).

'ஏழு நாட்கள் விடாது பொழிந்த கல்மாரியை, பேய் மழையை அடக்கி எவன் குன்றமெடுத்துக் கோகுலத்தில் அன்று ஆயாகளைக் காப்பாற்றினானோ? அவன்-அந்தக் கண்ணனே தான முன்பு வாமனனாக வந்தான. முன்பு மாவலி வேளவியல் மூன்றடி மண் கேட்டு, ஓரடியால் பூமியையும் மற்றோரடியால் விண்ணையும அளந்த திரிவிக்கிரமன் அவன் தான்!'

'அந்தப் பரம்பொருள். பரவாசுதேவன் தானாகவே விரும்பிச் சென்று அர்ச்சாவதாரத் திருமேனியுடன ஸ்ரீ நிவாஸனாக ஏழுமலையப்பனாகச சேவை தருவது திருவேங்கட மாமலை. திருமலை அந்த ஒன்றை. ஒரு திவ்ய தேசத்தை' ஒரு திருபபதியை வணங்கினாலே 108 திருப்பதியை வணங்கியதற்குச் சமம். "அநத ஒனறுமே தொழ நம வினை ஓயுமே". இது நம்மாழ்வார் செய்து வைத்த பட்டயம். சாசனம் உங்களுக்குக் கட்டாயம் 'மோட்சம்தான். உங்களது வினைகள் மாய்ந்து ஓய்ந்து விட்டன' என்றேன.

நண்பருக்கு மட்டுமென்ன, திருமலையப்பனைத் தொழும் நம் அனைவருக்குமே வினையின் பிடிப்பு இலலை தான்!

"திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே"

இதில் என்ன ஐயம்!

# ஏகாதசி

முன்னுரை :

ஏகாதசி என்ற வடசொல்லுக்குப் பதினொன்று என்று பொருள். இது வளர்பிறை ஆகிய பக்ஷங்களில் நிக ழும் பதினோராவது திதியைக் குறிக் கும. இச்சொல்லை வடமொழி இலக் கணபபடி பெணபாலாகக் கொள வது மரபு. இதை பெண்பாலாகக் கொளவதற்கு இரணடு பொருததங் களும உள. இது திதி என்ற பெண் பால் பெயர்ச சொல்லுக்கு அடை மொழியாக வருவதால் அதறகு ஏறப பெணபால் விகுதி பெற்று ஏகாதசி திதி எனப்படுகிறது. இத் திதியில் தோனறி துஷ்ட நிகரஹம் செய்து உலகுய்வித்த விஷ்ணுமாயை ஆகிய பெண தெய்வத் தோற்றததா லும் ஏகாதசி என்று பெணபால் பெயரால் அழைககப்படும். ஏகாதசி, துவாதசி எனற இரு நாட்களுமே திருமாலுககுரிய விரத திதிகளாகும். ஏகாதசி நாளில உபவாசமிருந்து இரவு உறக்கம விடுத்து திருமாலை வழிபடுவோர் இம்மை மறுமைப் பலன்களைப் பெறுவர் என்று அற நூல்கள் கூறுகின்றன. ஆயுர்வேத மும ஏனைய பிற மருத்துவ நூல்களும் இநத உபவாசம் ஆரோக்யத்திறகும், அறிவுத்தெளிவிற்கும் இன்றியமை யாத விரதமெனக் கூறுவதும் அறி யற்பாலது

ஏகாதசியின் தோறறம .

ஒரு கிருதயுகததில "முரன" என்ற அசுரன் ஒருவன இருநதான அவன் தேவாகளுக்குப் பகைவன, மிகக்கொடியவன. நல்லோரை நலி வது அவனுக்குப பொழுதுபோககு. யாகஙகளை அழிப்பது அவனுககு பெருமகிழ்ச்சி தருவது. அவன இநதிராதி தேவர்களை போரில வெனறு அவாகளை அமராவதியிலி ருநது விரட்டினான. கற்பக விருக்ஷம் காமதேனு போன்றவைகளைப் பறி முதல செய்து கொணடான் இந்திர னுள்ளிடட தேவர்கள் முரனது கொடுமைக்கு அஞசி புக்கொளிநத னர். அவர்கள எல்லோரும் கைலா யம் சென்று பார்வதி காந்தனிடம் தங்களுடைய அவல நிலையை தெரி வித்து தங்களுககு இந்நிலையைப் போக்கி இழநத போகங்களையும், போகஸ்தானங்களையும மீட்டு அளித் துதவ வேணடினா. சங்கரனும் கருணை கூாந்து "தேவர்களே! உங்க ளுடைய இன்னலகளை தீாக்கவல்ல வன புள்ளரையனான புண்டரீகாக்ஷன ஒருவனே அவரையே சரணம் புகு வோமாக அவா 'சரணாகத ரக்ஷகர். ஸாது ஸம்ரக்ஷக தீக்ஷிதர்" என்று கூறினாா.

தேவாகள முறையீடு .

தேவாகள திருப்பாற்கடலை அடைநதனா. பாற்கடலில் அரி துயில் அமர்நது இருககும பரமனடி பாடி இறைஞசினா. இவர்கள பிரார்த்தனையைக் கேட்ட பெரு மான் அவர் முன்னே தோன்றினான்; முரன் எனும் அசுரனால் தாங்கள் படும் சொல்லொணாத் துன்பங்களைத் துடைத்துதவ வேண்டும் என்றும் அந்தணர் இயற்றும அறவேளவிகளை அழித்து விட்டதால அவியுணவு இனறி பசித்து வாடுகின்றோம என றும பகவானிடம தெரிவித்தனர்.

திருமால கூறறு :

திருமால் தேவாகளை நோக்கி "முரன" என்போன யாவன்? எத்த கையன? அவன வலிமை எதத கைத்து? அவன யாங்குளன்? "என்று வினவ தேவேநதிரன் கூறுகின்றான்.

முரனின கொடுமை

பகவானே! வெகுகாலத்திறகு முன்பு பிரமம தேவனிடமிருந்து தாளஜஙகன் என்ற ஓர் பேரரக்கன் தோன்றினான் அவனுடைய மகனே இம்முரன். அவன் சந்திராவதி பெரு நகரை தலைநகராய்ககொணடு தேவர் களுககு சொல்லொணாத் துயரங்களை விளைவிககிறான. தாஙகள் அருளிய எங்கள் சொாக்க வாசத்தை பறித் துக் கொணடான். அஷ்டதிக் பாலர் களையும் பதவி நீக்கம செய்து தனனு டைய அரக்கர்களையே அந்த அதி கார பதவிகளில் நியமித்துளளான. உலகத்தையே தலைகீழாக்க முயற்சிக் கிறான். எங்களுக்குத தங்கள் திரு வடியல்லால் வேறு புகலில்லை தேவர் களுக்கு நன்மை பயபபவனான தாங கள் எங்களுடைய கஷ்டங்களைப் போக்கியருள வேணடும் எனறனர்.

மாயப்போர் :

பகவான் தேவர்களை நோக்கி "அஞசேல்! யாம சடுதியில் முரனைக் கொனறு அமராவதியை மீடடு அளிதது உங்களை மகிழவிப்போம். நீங்கள் உங்கள மறைவிடம் செல்வீ ராக" என்று தேவர்களை தேற்றி அனுப்பினான். பகவான் சங்கு சக்கர மேந்தி கருடன் மீதமர்ந்து, சந்திரா வதி பெருநகர் அடைந்தான். பக வானைக கண்ட முரன் முனிந்து ஆயுத மெடுத்து தாக்க முறபட்டான. 'ஓடாதே நில்' என்று சொல்லி அநேக சைன்யஙகளுடன் அவருடன் பொருத முனைந்தான். விஷ்ணு ஒரு வா அரக்கரோ பலர். எம்பெரு மான சககராயுததால் அரககர்கள அனைவரையும் அழித்தார். முரன் தனியனாக சலிக்காமல் நெடுநாள திருமாலுடன் பொருதான். அவனு டைய வரபலத்தினால் சக்கராயுதமும் அவனை துன்புறுத்த முடிநததே தவிர அவன் உயிரை மாய்க்க முடியவில்லை. முரன் சூலாயுதம் ஒன்றை எடுத்து ஏவினான். அது பகவானைத் தாக்கியது. திருமால் மயககமுற்று கீழே சாய்ந் தார். முரனுடன் தோல்வி பெற்ற திருமால பயந்தவர் போல் ஓடி வதரி யாச்சிரமம் சென்று ஒரு குகையில் புக்கொளிநதார். 'அக்குகை சிம்மா வதி என்ற மலை முழைஞ்சு ஆகும்.

கொட்டையூர். தம்பு.
ப. கிருஷ்ணசாமி,

அம்மலை முழைஞ்சு பன்னிரெண்டு யோசனை நீளமுள்ளது. ஒரே ஒரு நுழைவாயிலைக் கொண்டது. பன்னெடுங்காலம் முரனோடு பொருத களைப்பு தீர விஷ்ணு சுகமாக அங்கே படுத்து உறங்கலானார். இவவிதம் பகவான் உறங்கியதை யோகமாயை என்பர். சாதாரண தேவர்களே (அலவப்னர்) உறககமில்லாதவர்கள் எனறு சொல்லப்படுவர். அப்படியிருக்க பகவான் உறங்கியது எங்ஙனம? பகவான் ஏதோ காரணம் கருதி உறங்குவது போல பாவிக்கிறான். அதனையே யோகமாயை என்பர். இதனையே அறிதுயில என்றும் வழங்குவர். திருமாலைத் தேடித் தேடி கடைசியில முரன் சிமமாவதியை வந்தடைந்தான். உளநுழைநதான். பகவான் படுத்திருப்பதைக் கண்டான முன்பு அவரை அடித்து வீழ்த்திய சூலப்படையை எடுத்து, அடித்து ஒழிக்க கையை ஓங்கினான். திருமாலைக கொன்று விட்டதாகவே எண்ணி மகிழ்ந்தான்.

**ஏகாதசியின் தோறறம :**

அப்பொழுது ஓர் அற்புதம் நிகழ்நதது. பகவானின் திருமேனியிலிருந்து ஒரு அழகிய பெண் வெளிப்பட்டாள். அவள திருமாலின் அபார சகதியின் அம்சத்தோடு தோன்றிய பெணணரங்கு. வடிவழகில் சிறந்து விளங்குமஅவள் வியக்கத்தக்க பல படைகளை கையில் ஏந்தியிருந்தாள். அதிக பல பராக்ரமத்துடன் கூடிய அவள போருக்கு ஆயத்தமாக இருப்பவள் போல் அசுரனுககு முனனே நின்றாள் திமிர்கொணட அரககன் "பெணணே நீ என்னுடன் போா புரிவாயாக" என்று இடி முழக்கம் செய்தான். மேகத்தினிடையே தோன்றும் மினனொளி போல விளஙகிய அவள் தனனுடைய உடல் ஒளியால அந்த குகை முழுவதையும் ஒளி மயமாககினாள். ஒளி அவனை திகைககத வைத்தது அசுரனுடைய யுதத முஸதீபுகளை நிதானமாகக கண்டு கொணடிருந்து சிறிதும் அலட்டிக் கொள்ளாமல மோகனப் புன்னகையோடு ஹூங்காரத்தினால் அவனை மாயத்தாள். அவன் பேரொலி எழுப்பி மணமீது சாய்ந்து மடிந்தான். பிறகு அவள பகவானுடைய திருமேனியில மீணடும இரண்டறக கலந்து மறைந்தாள்.

**பெருமானின் பெருவியபபு**

சத்தம் கேட்டு கண் விழித்த பகவான உயிரற்ற முரனின் சடலத்தைக் கண்டார். கணடு வியநதாா. என்னைக் கொல்ல வநத இககொடிய வரக்கனைக் கொன்று எனக்குதவிய பேரருளாளன் யார்? என்று உரத்த குரலில் வினவினாா. அப்பொழுது அம்மட நல்லாள் அவரது கணணுக்குப் புலனாகாது நின்று, "தேவனே நான் ஏகாதசி. உம்முடைய அம்சத்தால் உமது திருமேனியிலிருநது உதித்தவள். உமது கருததறிந்து, கொடும்பாவியான இவவசுரன உம்மை கொல்வதற்குச் சூலத்தை ஓஙகிய பொழுது யான தோன்றி அவனைக கொன்றேன். இதுவும் உமமுடைய மகிமைதான். உஙகளுடைய லோகோபகார ஸங்கல்பம நிறைவேற்றப்பட்டது" என்றனள். இதைக கேட்டு பகவான் மிகவும் மகிழ்நது "ஏகாதசி மடநல்லாய் உனக்கு எனன வரம் வேணடும. தேவாகளும முனிவர்களும், மானிடர்களும் உனக்குக் கடமைப்பட்டுள்ளார்கள். அரிய பெரிய வரஙகளைக் கேள், அளிககின்றேன்" என்றார்.

**வரம வேண்டல :**

"பகவானே மூன்று முறை சத்யம் சத்யம், சத்யம என்று சபதம் செய்து நான கேட்கும வரத்தைத் தருகிறேன் என்று உறுதி கூறுங்கள். பிறகு சொல்லுகிறேன்" என்று கூறினாள். பெருமாளும் இசைந்தார். அப்பொழுது அவள் "நான் தோன்றிய இநநாள் சுக்லபக்ஷ பதினோராவது நாள். இந்நாள் புண்ணிய தினமாக விளங்கவேண்டும். நானகு யுகங்களிலும் மூவுலகங்களிலும புண்ணிய தினமான இநநன்னு

ளில் உபவாசம் இருந்து, உறங்காது, ஹரிபக்தி செய்து விரதமிருந்து, நன்னீராடி, தூய உடை அணிந்து பகவதாராதனம் செய்து, பாரணை செய்வார்க்கு வேண்டுவார் வேண்டிற்றெல்லாம் தாங்கள் தநதருள வேண்டும்'' என்று வேண்டினுள். பகவானும் ''ஏகாதசி! நீ கேட்டதெல்லாம் நடக்கப் போகின்றன. நீ என்னுடைய சக்தியே. நீ என்னுடைய யோக மாயை. உன்னுடைய தினத்தில் உபவாசமிருப்பார்க்கு நான வீட்டுப்பேறு வழஙகுவேன். அறம, பொருள், இன்பம் என்ற மூன்று இம்மைப பயன்களேயும் கொடுத்து மகிழவிப்பேன'' என்றுா.

இவவரலாறு ஸ்ரீ பாத்ம புராணத்தில் உத்திர கண்டத்தில் 36-வது அதயாயத்திலும, 40 வது அத்யாயத திலும, சங்கரன் நாரதர்க்கு உப தேசித்ததாகக் கூறப்பட்டுள்ளது. அமிர்த மதனம்:- ஏகாதசியைப் பற்றி மற்ருெரு வரலாறும் உணடு. இதில் துவாதசியின் பெருமையும் இணைந்து வருகிறது. தேவர்களும், அசுரர்களும் அமுதம கடைந்த தினமும் ஏகாதசி தினமாகும். மெய் வருத்தம் பாராது, பசி நோக்காது, கண துஞசாது, கருமமே கணணுக இடைவிடா ஸ்ரீஸூக்த ஜபத்துடன் பாறகடலைக கடைந்தனா. இதனுல் ஏகாதசி விரதம் அனுஷ்டித்து வராயினா. மறுநாள் வைகறைப பொழுதில் பாற்கடலினின்றும பிராட்டி ஆவிர்பவித்தாள. அனறு முதல் பிராட்டியின் அவதார தினத்தை புணணிய தினமாக அநுஷ்டிக்க வேணடும் எனற பகவானுடைய ஆக்ஞையின் பேரில்-பிருமமா முதலிய தேவர்கள முதல் தினமாகிய ஏகாதசி அன்று உபவாசம இருந்து பாரணை களை நடத்தி வநததாகவென்றும 260வது அத்யாயம் கூறுகிறது. ஆகையினுல் இந்த இரு தினங்களையும் திருமாலின் தினங்களாக விரதம் அனுஷ்டிக்கின்றோம.

வைகுண்ட ஏகாதசி :

நிர்ணய சிந்து என்னும தாம சாஸதிரம இந்த விரதத்தின் தோற்றம், பலன, ஆற்றும முறை பற்றி விரிவாகக கூறுகிறது. இந்த விரதம் வைணவர்களுககே சிறப்பாக அனுஷ்டிக்க வேணடும என்றும், சைவர்களும் அனுஷ்டிக்கலாம் என்றும், இது எம்மதத்தினருக்கும் பொது எனறும் வரைந்துள்ளது.

இநத மேற்கூறிய முரனுடைய வதம் மார்கழி மாத சுக்ல பக்ஷ ஏகாதசியில் நடந்தது. அதற்கு வைகுணட ஏகாதசி என்றும, மோக்ஷதா எனறும் பெயர். இறைவன் அனுகாரம் செய்து காட்டுகின்ற அதயயனேத்ஸவம் இந்நாளிலேயே கொணடாடப்படுகிறது. இதன் விரிவும் விளக்கங்களும பரமேஸ்வரம் முதலிய ஸமஹிதைகளில காணலாம. பாரதத்தின் கீதாவதாரமும இநத நன்னுளாகிய வைகுணட ஏகாதசியே என்பா.

பிற ஏகாதசிகளின் பெயர்களும பயனகளும் :-

விதிசா என்ற நகரத்தை ருக்மாங்கதன் என்ற அரசன் அறவழி வழுவாது ஆண்டு வந்தான். அவர் இந்த ஏகாதசியை அனுஷ்டித்த பெருமை உலகம அறியும்.

தைமாத கிருஷ்ணபக்ஷ ஏகாதசி ''சபலா'' என்றழைக்கப்படும். இது பன்மடஙகு பலனைத் தரவல்லது. தைமாத சுகலபக்ஷ ஏகாதசிக்கு ''புத்ரதா'' என்று பெயர். இந்நாளில் விரதமிருப்போர்க்கு பித்ருசாபம் விலகும். நல்ல சந்தானங்கள் ஏற்படும். மாசிமாத கிருஷ்ண பக்ஷ ஏகாதசிக்கு ''ஷட்திலா'' என்று பெயர். இது பிருமமஹத்தி தோஷத்தையும் நீககவலலது. அன்றைய தினம் எள் கலந்த நீரில் ஸ்நானம் செய்து தலையில் கொஞ்சம எள்ளைப் போடடுக் கொணடு, எள்ளால் ஹோமம் செயது எள்ளையே ஆகாரமாகக் கொணடு எள்ளை தானம் செய்து போன்ற ஆறுவித காரியங்களை எள்ளால் செய்வதற்கு ''ஷட்திலே' 'என்று பெயர். மாசிமாத சுக்லபக்ஷ ஏகாதசிக்கு ''ஜயா'' என்று பெயர். இது சகல பாவங்களேயும் நீக்க வல்லது. பங்குனி கிருஷ்ணபக்ஷ ஏகாதசிக்கு ''விஜயா'' என்று பெயர்.

## திருப்பதியில் தங்கு வசதி காட்டேஜுகளின் கட்டண விவரங்கள் (நாள் ஒனறிறகு)

**ஸ்ரீவேங்கடேஸ்வரா தர்ம சத்திரம :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |
| நான்கு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக கொணட அறை: | ரூ. 25-00 |
| ஒரு படுக்கையும, மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 15-00 |

**ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரணடு படுக்கைகளையும், குளிர்ச்சாதனம, மேசைநாற்காலி வசதிகளைக் கொண்ட அறை. | ரூ: 50-00 |
| ஒரு படுக்கையும குளிர்ச்சாதனம் மற்றும் மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 30-00 |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரணடு படுக்கைகளைக் கொண்டு மேசை நாறகாலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |

ராமனே கடல் கடக்க இவ்விரதம் மேற்கொண்டார் எனகிறது பத்ம புராணம் பங்குனி சுகலபக்ஷ ஏகாதசிககு "குமலகீ" என்று பெயர். ச்யவன ரிஷியின் குமாரரான மேதாவி பாப மோசினி ஏகாதசியை அனுஷ்டித்து வீடு பெற்றார். வேணடுவார் வேணடிற்றெலலாம் கொடுக்கவல்லது "காமதா" என்ற சித்திரை சுக்லபக்ஷ ஏகாதசி. வைகாசி மாத கிருஷ்ணபக்ஷ ஏகாதசி "வருதினீ" எனப்படும். இது எல்லா இனபங்களையும தரவல்லது. வைகாசி மாத சுக்லபக்ஷ ஏகாதசிக்கு "மோஹினி" எனறு பெயர். இது கங்கை, புஷ்கரம், கௌதமி நதிகளில ஸநானம் செய்த புணணியததையும, பத்ரீ தாசன பலனையும கொடுககவலலது. ஆனிமாத சுக்லபக்ஷ ஏகாதசிககு "நிர்ஜலா" என்று பெயர். இதைப் பேணுவார யமலோகம காணமாட்டார். ஆடிககிருஷண பக்ஷ ஏகாதசிககு "யோகினி" என்று பெயர். இது லக்ஷப்ராமண போஜன பலத்தைத் தருவது. ஆடி சுக்லபக்ஷ ஏகாதசிக்கு "தேவஜனீ" என்றுபெயர். இன்றுதான் மகாவிஷ்ணு ஆதிசேஷன் மேல் அரிதுயில கொளகிறார். இக்காரணத்திஞல இது சயன ஏகாதசி என்றும், புரட்டாசி மாத சுகலபக்ஷ ஏகாதசி புரணடு திருமபிப படுப்பதால் பரிவர்த்தன ஏகாதசி என்றும், கார்த்திகை சுகலபக்ஷ ஏகாதசியில் கண் விழிதது எழுந்திருக்கிறா ஆகையிஞல் இது "உத்தான" ஏகாதசி எனறும அழைக்கப் படுகிறது ஆவணிமாதம் கிருஷ்ண பக்ஷ ஏகாதசிக்கு "பவித்ரா" என்று பெயர். இதை அனுஷ்டிப்பவர் பிற விப்பிணி அறுவர். ஆவணி மாத சுக்லபக்ஷ ஏகாதசிககு "புதரா" என்றுபெயா. புரட்டாசி மாத கிருஷணபக்ஷ ஏகாதசிககு "அஜா" என்று பெயா. புரட்டாசி மாத சுகலபக்ஷ ஏகாதசிக்கு "பரிவர்த்தினீ" என்றும், வாமன ஜயந்தி ஏகாதசி என்றும பெயா. சிரவண நக்ஷத்திரம் கூடிவரும் ஏற்றமுடையது. ஐப்பசி கிருஷ்ணபக்ஷ ஏகாதசிக்கு "இநதிரா" என்று பெயா. ஐப்பசி மாத சுக்ல பக்ஷ ஏகாதசிககு "பராஙகுசா" என்று பெயா. கார்த்திகை மாத கிருஷ்ணபக்ஷ ஏகாதசிக்கு "பிரபோதினீ" என்றும் 'உத்தான ஏகாதசி' என்றும் பெயர். கைசிக ஏகாதசி என்றும், துளசி கல்யாண வைபவத்தால் பிருநதாவன ஏகாதசி எனறும் அழைபபர். அதிமாஸ சுகலபக்ஷ ஏகாதசிக்கு "பத்மினி" எனறு பெயர். அதிமாஸ கிருஷண பக்ஷ ஏகாதசிககு "பாமா" என்று பெயர்.

முடிவுரை:

ஏகாதசி நாளில் உபவாசம் இருகக வேணடும; அனறு பிறர்க்கும் அன்ன மிட்டு, உபவாசபஙகம செய்யக கூடாது எனற மரபுகள் தொன்று தொட்டு வருகின்றன. ஆயிரக கணக்கான அறககட்டளைகள் நாட்டில் உள. எநத ஒரு அறக்கட்டளையும், அனனம் பாலிப்பும் ஏகாதசி அன்று மட்டும்செயய இடம் கொடுக்கவிலலை. ஏனைய பிறநாட்களில் மட்டுமே செய்யும்படி சாஸனங்களும், கலவெட்டுககளும கூறுகின்றன. ஏகாதசியில் இறந்து, துவாதசி அன்று தகனம செய்யபபட்டோர் வீடுபேறு அடைவர் என்பது அறநூல கோட்பாடு. ஏகாதசி திதி சிரார்ததஙகளை ஏகாதசி அன்று செயயாது துவாதசி அனறே அந்தணா உலகம அனுஷ்டிககும். இதிலிருநது இந்த உபவாசம எவவளவு பெருமை உடையதுஎன்பதும, மேலான பலனை அளிக்கவல்லது என்பதையும், அனுஷ்டிக்காதவாகள அடையும கேடுகளையும் ஒருவாறு உணாந்து கொண்டோம. நாமும இவ்விரதத்தை தவறாது அனுஷடித்து நறபேறு பெறுவோமாக.

ஸ்ரீ

## ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில், திருப்பதி.

### தினசரி நிகழ்ச்சி நிரல்

**காலை**

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | சுப்ரபாதம் |
| 5-30 | முதல | 9-30 | வரை | ஸர்வ தரிசனம் |
| 9-30 | ,, | 10-30 | ,, | அபிஷேகம (ஆர்ஜிதம) |
| 10-30 | ,, | 10-45 | ,, | முதல மணி |
| 10-45 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம |
| 11-30 | ,, | 11-45 | ,, | இரண்டாவது மணி |
| 11-45 | ,, | 3-45 (மாலை) | | ஸர்வ தரிசனம் |

**மாலை**

| | | | | |
|---|---|---|---|---|
| 3-45 | முதல் | 4-15 | வரை | அபிஷேகம (ஆர்ஜிதம) |
| 4-15 | ,, | 5-15 | ,, | ஸகஸரநாம அாசசனை (ஆர்ஜிதம) |
| 5-15 | ,, | 5-30 | ,, | இரவு மணி |
| 5-30 | ,, | 6-00 | ,, | ஸர்வ தரிசனம |
| 6-00 | ,, | 6-30 | ,, | தீபாராதனை |
| 6-30 | ,, | 8-00 (இரவு) | | ஸர்வ தரிசனம் |

**இரவு**

| | | | | |
|---|---|---|---|---|
| 8-00 | முதல | 8-15 | வரை | ஏகாநத சேவை |

(ரூ. 1/– வீதம் செலுத்திஞல், நபர் ஒருவர் ஆர்ஜித சேவையின் போது அனுமதிக்கப்படுவார்)

# திருவாதிரைத் திருநாள்


தில்லை அம்பலவன் திருத்தாண்டவக் கோலம்

சனமிஷ்டை

மிராடம் பாவ்லோவா என்ற ரஷ்ய நாட்டு அம்மையார் பல நடனத் தோற்றங்களில் மேடைமீது காட்சியளித்தார். கடைசியாக ஒரு அற்புதமான நடனத்தை ஆடி, ஆட்டத்திற்கு முத்தாய்ப்பு வைத்தார். இந்த நடனத்தைக் கண்டுகளித்த ஒரு ரஸிகருக்கு, கடைசியாக ஆடிய ஆட்டத்தின் பொருள் விளங்கவில்லை.

அரங்கத்தின் மீதே ஏறி, அம்மையாரைச் சந்தித்து, "அம்மையே, தாங்கள் ஆடிய அந்தக் கடைசி நடனத்தின் பொருள் என்ன?" என்று கேட்டார். அதற்கு பாவலோவா அம்மையார் சொன்ன பதில் இதுதான். "அப்படி அந்த நடனத்தின் பொருளை விளக்கி நான் வார்த்தைகளில் சொல்லக் கூடுமானால், நான் நடனமே ஆடி இருக்க வேண்டாமே?" (*If I could say that in words, I need not have danced it.*)

உண்மைதான், வெறும் வார்த்தைகளினாலே விஷயத்தைச் சொல்லிவிட முடியும் என்றால் அதை நடனமாடிக் காண்பிப்பானேன்? சொல்லால் விளக்க முடியாத ஓர் அற்புத தத்துவத்தைத்தான், நடராஜரது நடனம் விளக்குகிறது நமக்கு.

"வான் நின்று இழிந்து வரம்பு இகந்த மாபூதத்தின் வைப்பு எங்கும் ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறத்தும் இயங்குகின்றான் இறைவன். அணுவிற்குள் அணுவாக நின்று ஆடுகிறான்; அணுவிற்கு வெளியே இருந்து அதனை ஆட்டுகிறான். அணுவின் ஊனாக இருந்து உடலைத் தாங்குகிறான்.

உயிராக இருந்து ஊக்குகிறான்; உணர்வாக இருந்து ஆடுகிறான். ஆம், கயிறு இல்லாமலேயே, இந்த அண்ட பம்பரங்களை ஆட்டத் தெரிந்தவன் அவன். ஆட்டுவிக்கின்றவனும் ஆடிக்கொண்டேதான் ஆட்டுகிறான். அவன் ஆடிக்கொண்டே ஆட்டினால் தான் அண்டங்கள் ஆடும். இப்படி எல்லாம் சிந்திக்கிறார்கள் நம கலைஞர்கள்.

"ஒரு நாமம், ஓர் உருவம், ஒன்றும் இல்லாத" அந்த இறைவனை ஆடும் பெருமானாக நடராஜனாக உருவாக்கி இருக்கிறார்கள். அதைச் சித்திரத்தில் தீட்டியிருக்கிறார்கள். சிற்பத்தில் செதுக்கி இருக்கிறார்கள். உலோகத்தில் வார்த்திருக்கிறார்கள். கல்லிலும், செம்பிலும "கண்டகண்ணுதலை" சொல்லிலும பாவிலும் வடித்தெடுத்திருக்கிறார்கள்.

மந்திரம் பாடிய திருமூலர், சங்கப் புலவர் கபிலர், நக்கீரர், சமய முனிவர்களான சம்பந்தர், அப்பர், மணிவாசகர், தெய்வக் கவிஞர்களான வள்ளுவர், கம்பர், சேக்கிழார், பரஞ்சோதி முனிவர் முதலானோர் எல்லாம் பாடிப் பாடித் துதித்திருக்கிறார்கள். அப்படிப் பாடித் துதிப்பதற்கு உரியவனாயிருந்த பெருமானின் பெருவிழாக்களில் ஒன்று திருவாதிரை.

**திருவாதிரைச் சிறப்பு:**

நட்சத்திரங்கள் இருபத்தேழில் 'திரு' என்ற அடைமொழியுடன் இரண்டு நட்சத்திரங்களே உள்ளன. அவை திருவாதிரை, திருவோணம் என்பன.

திருவாதிரை சிவபெருமானுக்கு உகந்த நாள்; திருவோணம் திருமாலுக்குச் சிறந்த நாள. "மாதங்களுள் மார்கழி மாதமாக இருக்கிறேன்" என்று கூறுகிறான் கண்ணன், தாம அருளிய கீதையில்! இந்த மாதமே தேவர்கள் நாளில்

''வைகறைப் ' போதாகக் கருதப்படு கிறது.

மார்கழி மாதத்தில் பௌர்ணமியும், திருவாதிரை நட்சத்திரமும் கூடிய நாள் திருவாதிரைத் திருவிழாவிற்கு உரிய நாள். ''இன்பமான மார்கழி மாதத்தில் திருவாதிரையில் தாண்டவ மூர்த்தியை வழிபடுக!'' எனக் கூறுகிறது காரணாகமம் என்னும் நூல்.

திருமுறைகளில் யாண்டும் ''ஆதிரையன்'' என்று சிவபெருமானைப் பற்றி சொல்லப்படுவதால், அவ் விறைவனுக்குத் ''திருவாதிரை'' சிறந்த நாள் எனக் கூறப்படுகிறது. திருஞான சம்பந்தப் பெருமான் பூம்பாவைப் பதிகத்தில் ''கார்திரு சோலைக் கபாலீச்சரம் அமர்ந்தான். ஆதிரை நாள் காணுதே போதியோ பூம்பாவாய்'' என்று பாடிப் புகழ்ந்திருக்கிருர்.

திருவாதிரை விழா பொதுவாக விநாயகப் பெருமானுக்கும், சிறப்பாக நடராஜப் பெருமானுக்கும் நடைபெறுகிறது. சிதம்பரத்தில் மார்கழி திருவாதிரையன்று திருவிழா வெகுச் சிறப்பாக நடைபெறுகிறது. அத்திருநாளில் பல்லாயிரக் கணக்கான மக்கள் தென்னுட்டுச் சிவனைக் கூத்தப் பெருமானைக் கண்டு வழிபடுகின்றனர். குனித்த புருவத்தையும் குமின் சிரிப்பையும விரித்த சடையையும பவளமேனியையும எடுத்த பொற்பாதத்தையும் கண்டு களிக்கின்றனர்.

இறைவன் உமையம்மை காணத் திருக்கூத்து இயற்றும் காரணத்தால் தான் இவ்வண்ட சராசரங்கள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. உலகில் அறிவுடைப் பொருள்கள் வினைப் போகம் துய்க்கின்றன. அவற்றிற்கு அறிவில்லாப் பொருள்கள் பயன்படுகின்றன. இதுவே எம்பெருமான் செயயும் ஊன நாடகம்.

நிலையற்ற உலகின்பஙகளினின்றும் நிலைத்த பேரின்பத்தைக் கொடுப்பது இறைவன் திருவடிச் சார்பென்று உயிர்கள உணர்ந்து நிற்கும் தன்மையைக் காட்டுவது ஞான நாடகம். இதை மணிவாசகப் பெருமான், ''ஊன் நாடகம் ஆட்டு விததவா, உருகி நான் உனைப் பருக வைத்தவா, ஞான நாடகம் ஆட்டுவித்தவா'', என்று விளங்க உணர வைத்திருக்கிருர்.

''இந்து வாழ்சடையான் ஆடு மானந்த வெல்லையில் தனிப்பெருங் கூத்து'' என்றும், ''ஆதியும் முடிவு மில்லா அற்புதத் தனிக் கூத்து'' என்றும் சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தில் கூறுகிருர்.



தில்லைச் சிதம்பரம் கோவில்

**தில்லைக் கூத்தனின் திருநடனம்:**

தில்லைக் கூத்தனின் திரு நடனம் ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம் பெரும் தொழில்களைக் குறிக்கும். இதனை,

''தோற்றம் துடியதனில்
தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே
சங்காரம் ஊற்றமாம்
ஊன்று மலர்பபதத்தில
உற்ற திரோதம் முத்தி
நான்ற மலர்ப் பதத்தே நாடு '

என்னும் பாடலால் நன்கு அறியலாம். துருவிஞல் மெய்ப்பொருளை நன்கு அறியலாம்.

கூத்தப் பிரானின் திருவுருவ அமைப்பானது சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் தன்னுள்ளே அடக்கி அவற்றின் அறிகுறியாக நின்கின்றது என ஆன்ருேர் கூறுவர். அப்பெருமானின் திருவுருவம் தூல, சூக்கும ஐந்தெழுத்துக்களை உணர்த்தி நிற்கும் பான்மையில் அமைந்திருக்கிறது என்றும் கூறுவர்.

தில்லைக் கூத்தனின் திருவுருவப் பேரழகைக் கண்டு கழி பேருவகை கொண்ட அப்பரடிகள் ''மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' என்று கூறுகிருர். ஆதலின் மககளாய்ப் பிறந்த பயன் எய்த வேண்டுபவர், உய்ய நெறி விழைபவர் ஆண்டவனின் தாண்டவத்தைக் காண்டல் அவ்சியம் அதுவும் மாாகழி மாதம் திருவாதிரையன்று பார்பபது மிகவும் சிறந்தது.

மார்கழி மாதத்தில் திருவாதிரையை இறுதி நாளாகக கொண்டு ஆலயங்களில திருவிழா நடைபெறுகின்றது. முதல ஒன்பது நாட்களிலும் மாணிக்கவாசகருக்கு சிறப்பு பூசனை செய்வித்து திருவிதி எழுந்தருளச் செய்ய வேண்டியது முறை.

கோயிலின் எட்டுத் திக்குகளிலும் திருவாசகத்தில் உள்ள திருவெம் பாவை முதல் எட்டுப் பாடல்களையும் பாடச் செய்து கோயிலுக்குள் மற்றப் பன்னிரண்டு பாடலகளையும் பாட வேண்டும். எட்டு திக்கிலுமுள்ள வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, பலவிகரணி, கலவிகரணி, பலப்பிர மதனி, சருவபூததமனி என்ற எட்டு சத்திகளை ஒன்பது சக்தியாகிய மனோன்மணி எழுப்பி இறைவன் சேர்ப்பிப்பதை ஒக்கும்.

திருவாதிரைத திருநாள் இறை வன் இயற்றும் ஐம்பெரும் தொழில் களின் உண்மையை விளக்க வந்த திருவிழாவேயாகும். திருவெம் பாவையின் கடைசிப் பாட்டான "போற்றியருளுக" என்று தொடங் கும் செய்யுளில் ஐந்தொழில்களும குறிககப்பட்டிருக்கின்றன.

நடராஜப் பெருமானுககு நிகழ்த் தும் அபிஷேக ஆராதனைகளிலும் ஐந் தொழில் முறை அமைந்திருபபதாக ஆன்றோர் கூறுவர். பெருமானைப் பீடத்தை விட்டு எழுந்தருளப் பண்ணுதல் தோற்றம்; திருமுழுக்கு முதலியன திதி; கறுப்புச் சாந்து அணிதல் சங்காரம்; வெள்ளை ஆடை சாத்தல் திரோபவம்; உற்சவம் கொண்டருளல் அநுக்கிரகம்.

அந்த திருவாதிரை நாளில் இறை வனுக்குக "களி" நிவேதனம செய் வது வழக்கம். இதைப் பற்றிய வர லாறு ஒனறுண்டு. திருவிசைப்பா பாடிய சேந்தனுர் அனபின திறத்தை இவவுலததிறகு அறிவிக்கத் திரு வுளம கொண்டார் ஆண்டவன். அவ் வடியாா நிவேதித்த களியினை சிதம பரம் கோயில் முழுவதும் சிதற வைத்து மணங்கமழச் செய்தார்.

மெய்யன்பர்கள் இதன் கருத்துத் தெரியாது திகைத்தனர். அப்போது இறைவன் "சேந்தனுர் படைத்த களி யினை உண்டு மகிழ்ந்தோம்" என்று அசரீரியாகச் சொன்னுர். 'திருவா திரை ஒரு வாய்க்களி" என்ற பழ மொழி நம் நாட்டில் வழங்குவது யாவரும் அறிந்ததே!

"இறைவன் திருப்புகழ் ஒன்றைத் தவிர வேறொன்றையும் பேசாத பேற்றைக் கொடுக்க வேண்டும்" எனற குறிப்புடைய "ஒருவர்க்கு அளி" என்று திருவாதிரையன்று விண்ணப்பததில் இந்த "திருவாதிரை ஒருவாய்க்களி" என்ற பழமொழியில் தொனித்து நிற்கின்றது போலும்!

சேநதனுர் களி நிவேதித்த செய தியை திருக்களிற்றுப் படியாா என்ற சித்தாந்த சாஸதிர நூல்,

"அவிழ்ந்த துணியில் அவிழ்த்த
அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க—
அவிழ்ந்த சடை
வேந்தனுர்க் கின்ன முதமாயிற்றே
மெய்யன்பிற்
சேந்தனுர் செயத செயல"

என்று புகழ்ந்து கூறுகிறது.

**தில்லையைப் பற்றிய சில செய்திகள்:**

சிவநேசச் செல்வர்களாகிய சைவர் களுடைய "கோயில்" சிதம்பரம. தில்லை மரங்கள் அடர்ந்த வனமாக இருந்ததால் தில்லைஸ்தலம் என்ற அழகிய பெயரைப் பெற்றது போலும்! இதனைப் பூலோக கைலாயம் என்றும் "விசேஷ க்ஷேத் திரம்" என்றும், "இருதயத்தான" மென்றும் கூறுவர்.

பிற தலங்களில் உள்ள மூர்த்தி கள் இந்த இருதயத் தானத்தில் ஒடுங்கி மீண்டும் காலையில் அந்த அந்தத் தலத்திற்குச் செல்லுவார்கள் என்பர். கலைகள் எல்லாம் அர்த்த யாமத்தில் இங்கே வந்து ஒடுங்குவ தால் அர்த்தயாம தரிசனம் இங்கே விசேஷமாகக் கருதப்படுகிறது.

தல இலிங்கத்தின் பெயர் மூல நாதர் என்பது. இவர் எழுந்தருளி யிருக்கும் இடம் மூலஸ்தானம். கூத்தப் பெருமானின் நடன தரிசனம் காண வேண்டுமென்று பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்ற முனிவர்கள் இந்த இலிங்கத்தை நோக்கி வழி பட்டு நீண்ட காலம் தவம் கிடந் தனர்.

அவர்கள் தவத்திற்கு இரங்கி நட ராஜர் காட்சி அளித்ததாக ஐதிகம். சிதம்பரம் பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்று. இங்கே உள்ளது ஆகாய லிங்கம். "அம்பலமாவது ஆகாசம்" என்கிறார் நந்தன் சரித்திரக் கீர்த் தனை ஆசிரியர்.

திருவாரூரில் சுந்தரர் திருத் தொண்டத் தொகை பாடத் தொடங் கியபோது இறைவனே அசரீரி யாக, "தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடி எடுத்துக் கொடுத்தது தில்லையின் தலைமையைக் காட்டும் எனலாம். திருநாளைப்போவார், திருநீலகண்டர், மாணிக்கவாசகர் ஆகியோர்க் கெல்லாம் தில்லையம்பலவர் அருளி யதைக் கூறப்புகில் விரியும் என அஞ்சி நிறுத்துகிறோம்.



ஸப்தகிரியில் வெளியிடப்படும் கதை, கட்டுரைகள், கவிதை கள் ஆகியவறறில் காணப்படும் கருததுக்கள் அவ்வவ் எழுத்தாளர் பெருமக்களின் தனிப்பட்ட கருத்துக்களேயாம். அவற்றிற்கு 'ஸப்தகிரி' எவ்வகையிலும் பொறுப்பேறகாது

— ஆ.

# கர்நாடக இசையின் வரலாறு

திரு. பி. சுந்தரராமன், எம் ஏ.பி எட்.
பழமார்னேரி.

தென்னாட்டிசை, கர்நாடக இசை எனப்படும். கி.பி. 1116 முதல் 1127 வரை சாளுக்கிய மன்னனாக இருந்த இசைமேதை சோமேச்வரமல்லன் காலம் முதல இப்பெயர் வந்தது. மதங்கர் என்ற முனிவரால் இயற்றப் பட்ட பிருஹத்தேசியில்தான் முதன் முதலில் ராகம் என்ற பெயர் கூறப் பட்டுள்ளது. கி. பி. ஆறும் நூற்றாண்டைச் சேர்ந்த நரசிம்மவர்ம பல்லவனின் அவைப் புலவரான ருத்திராசாரியார் மேளகர்த்தா ராகங்களைப் பற்றிய கல்வெட்டை குடுமியானமலையில் செதுக்கியுள்ளது இன்னும் உள்ளது. கி.மு. 2ம் நூற்றாண்டில் எழுந்த காளிதாஸரின் சகுந்தலா நாடகத்தில் 'இந்த துஷ்யந்தன் என்ற அரசன் மிகவும் வேகமாக பாடப்பட்டு வந்த சாரங்கா என்ற ராகத்தினால் இழுக்கப்பட்டு தன் வயமானவன்' என்ற செய்தி காணப்படுகின்றது.

ச்ருதிகள் 22 என்றும் அவற்றில் ஸ்வரங்களின் பிரகிருதி விக்ருதி பேதங்கள் 16 என்றும் இவற்றைக் கொண்டுதான் பல்வேறு ராகங்களை நமது முன்னோர் ஆக்கியுள்ளனர் என்பதும் வரலாற்று பேருண்மை. ஸ்வர மேள கலாநிதி இயற்றிய ராமமாத்தியர் என்பவர், 20 ராகங்களுக்கு இலக்கணமும், ஸங்கீத ஸுதா இயற்றிய தஞ்சை அமைச்சர் கோவிந்த தீக்ஷிதா 15 ராகங்களுக்கு இலக்கணமும, இவர் மகன் வேங்கடமஹீ தன் சதுர்தண்டி பிரகாசிகா என்ற நூல் மூலம் 72 ராக லக்ஷணமும் எழுதியுள்ளனா. இன்று வழக்கிலிருப்பது இவர் முறையே ஆகும். ராக ஸாகரம் என்ற புராதன நூலின் மூலம் தத்திலர், நாரதர் என்ற இருவரும் ராக லக்ஷணங்களை எழுதியதாகத் தெரிகிறது. இந்நூல் தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் உள்ளது.

பாரத வார்த்திகம் என்ற நூலை இயற்றிய மிதிலை அரசர் நான்னிய தேவர் 140 ராக லக்ஷணங்களைத் கூறியுள்ளார். இவர் கி. பி 1097 முதல் 1147 வரை அரசாண்டவர். கி. பி 11, 12ம் நூற்றாண்டுகளில் வசித்த ஜயதேவ், கீத கோவிந்தம் என்ற கிருஷ்ணன், ராதை, தோழியர் உரையாடல் அடங்கிய ஸாஹித்யங்களை வட இந்திய ராகங்களில் அமைத்தார். இவற்றிற்குத் திருமலைராயன் பட்டினம் ராமுடு பாகவதர் என்பார் கர்நாடக இசை ராகங்களை அமைத்தார். அஷ்டவதி என்ற இந்த அமைப்பைப் பின்பற்றி சிவாஷ்டபதி, ராமாஷ்டபதி என்ற அமைப்புப்பாடல்களைப் பல்வேறு கடவுளரைப் பற்றி எழுந்தன. சங்கீத பிதாமஹரான புரந்தரதாஸரின் இசைப்பணி அளவிடற்கரியது. ஆந்திரத்தில் கி பி. 15ம் நூற்றாண்டில் வாழ்ந்த தால்லபாக்கம் அன்னமாசார்யா என்பவர் திருப்பதி ஏழுமலைப் பெருமான மீது கீர்த்தனைகளை இயற்றினர். இந்த மஹானே முதன் முதலில் பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற அமைப்பை சங்கீர்த்தனலு என்ற பெயரில் உருவாக்கினா. இவரைப் பின்பற்றியே பிற காலத்தில் தியாகராஜர், முத்து ஸ்வாமி தீக்ஷிதா, சியாமா சாஸ்திரிகள் என்ற சங்கீத மும்மூர்த்திகள் அளவிடற்கரிய கீர்த்தனைகளை எழுதி உள்ளனா.

கி. பி. 15ம நூற்றாண்டில் பத்ராசலத்தில் வசித்து வந்த கோபன்னா என்ற ராமதாஸர் நூற்றுக்கணக்கான கீர்த்தனைகளை எழுதியுள்ளார். தஞ்சை மாவட்டம் திருவிசைநல்லூர் ஸ்ரீதர வேங்கடேசா, காமகோடி பீடாதிபராகிய போதேந்திர ஸத்குரு ஸ்வாமிகள், சதாசிவ பிரம்மேந்திரர் ஆகியோர் கீர்த்தனை பத்ததியைப் பிரபலப்படுத்தினர் முத்துதாண்டவர், அருணாசல கவிராயர், கோபால கிருஷ்ணபாரதி என்போர் தமிழிசை மும்மூர்த்தியாவர்

நமது நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் ஆபிரர்கள், காமபோஜர்கள், மாளவர்கள், பைரவர்கள், ஸௌவீரர்கள், புளிந்தர்கள் பல்வேறு ராகங்களை முன்னாளில் இயற்றியுள்ளனர். ஸௌவீரர்கள வேடர்களாவர். இவர்களிடமிருந்து ஸாவேரி, அஸாவேரி, சுத்த ஸாவேரி, கஸாஸாவேரி, சாரங்கா போன்றவை தோன்றின. மாளவர்களிடமிருந்து மாளவம், மாயா மாளவ கௌளம தோன்றின. ஆபிரர்களிடமிருந்து ஆபேரி, ஆபோகி, ஆபீரு முதலிய ராகங்களும், காம்போஜர்களிடமிருந்து காமபோதியின் பல்வேறு வகைகளும பைரவர்களிடமிருந்து பைரவியின் வகைகளும் தோன்றின.

இந்த சங்கீதம், நாட்டியம ஆகியவை எதற்கு ஏற்பட்டன என்று பரதநாட்டிய ஸங்கரஹம் கூறுகிறது.

'' ந்ருத்தம் த்வத்ர நரேந்த்ராணும
அபிஷேக மஹோத்ஸவே ।
யாத்ராயாம தேவ யாத்ராயாம
விவாஹேபரிய ஸங்கமே ॥
நகராணு மகாராணும பரவேசே புத்ர
ஜன்மனி ।
ப்ரஹ்மணேக்தய பரயோகதவயம
மாங்கல்யய ஸர்வ கர்மஸு ॥

மேலே கூறியபடி அரசர்களின் பட்டாபிஷேகத்திலும், இறைவனின் உதஸவங்களிலும், வீட்டில் நடக்கும் உபநயனம விவாஹம போன்ற விசேஷங்களிலும் இசை, நாட்டியம் போன்றவற்றின் தேவை அவசியமாகிறது. ஸுப்ரபேதம என்ற ஆகமத்தில சிவோத்ஸவ விதிப்படலத்தில்,

(32-ம பக்கம பார்க்க)

# சமதரிசனத்திற்கு ஒரு சபரிமலை

ஐயப்பதாஸன்—திருப்பதி.

நீக்கமற நிறைந்துள்ள கடவுளை எல்லோருமே போற்றி வணங்கி நற்பேறு பெறும் வண்ணமே மானுடர் யாவரையும் ஒரே உருவ அமைப்பில் சமைத்துள்ளார் முன்னவர்.

ஆயின் மானுடர் தத்தமக்கு இசைந்த வழியைப் பின்பற்றி இறையை அடைய முயன்று வெற்றியும் கண்ட மஹான்களின் வழியைப் பின்பற்றுவோரை அந்தந்த சமயத்தைச் சார்ந்தவர்கள் என்று கூறுவது வழக்கம். இவ்வாறு நல் எண்ணத்துடன் துவக்கப்பட்ட சமயங்கள் தங்களுக்குள் ஜாதிகள் என்னும் காளான்களை உற்பத்தி செய்து அதன் மூலம் உயர்வு தாழ்வுகளை ஏற்படுத்திக் கொண்டு தமக்குள் கலஹித்துக் கொண்டு, தங்களைச் சார்ந்தவர்களையும், பிற சமயங்களையும், கடவுளர்களையும் நிந்தித்து வாழும் இழி நிலைக்குத் தள்ளப்பட்டு, கிடைத்தற்கரிய மானுடப் பிறவியின் பயனை தமது மதியீனத்தினால் இழக்கின்றனர்.

மதங்கள் என்ற நோக்கில் ஆராய்ந்தால் புராதனமான இந்து மதம் மேலோங்கி நிற்கின்றது. ''அஃது தனக்குத் தானே உருவான ஸ்வயம்பு மதம்'' என்ற பெருமையும் இந்து மதத்திற்கு உண்டு.

''உலகில் தருமத்திற்கு வாட்டமும் அதர்மத்திற்கு ஏற்றமும் ஏற்படும் போது, நான் எனது மாயா விலாஸங்களால் பல உருவங்களை அந்தந்த கால கட்டத்திற்குகந்தபடி எடுத்து வருவேன். எடுக்கப்படும் (மேற்கொள்ளப்படும்) உருவங்களும், பிரிவுகளும், தன்மைகளும் வேறு வேறாயினும், உட்கருத்து தீயதை அழித்து தருமத்தை நிலைநாட்டுவதே''. இது கீதையில் கண்ணன் வாக்கு.

சபரிமலைக் கோவிலில் சாஸ்தா என்ற தேவனை ப்ரதிஷ்டித்துள்ளனர். சாஸ்தா என்ற பதத்திற்கு புத்தன் என்று அமர கோசத்தில் அர்த்தம் சொல்லப்பட்டுள்ளது. (அதாவது சமத்வாதி குணங்கள் நிரம்பப் பெற்றவன் என்பது பொருள்) புத்தனுடையவும், மஹா வீரனுடையவும அவதாரங்களாகவும், அவர்களைக் கடவுளாய்ப் போற்றுவதும் அவர்கள் மேற்கொண்ட கொள்கையான தருமத்தைக் காத்தல் என்ற செயலும், அவர்கள் கடைப் பிடித்த வழிகளான பக்தி, வைராக்யம், சத்யம், தர்மம் போன்ற உயர் பண்புகளுமே அவ்வவதாரத்தின் பெருமையாகும்.

அதே கொள்கைப் பற்றுடனும், நற்பண்புகளுடனும் அவதரித்த ஐயப்பன சாக்ஷாத் ஹரிஹர புத்திரன் என்பதே இந்துக்களின் நம்பிக்கை.

தருமத்தை சாஸித்து, கற்பித்து, ரக்ஷிக்கும் தேவனாகிய ஸ்ரீ தர்ம சாஸ்தாவின் ஒரு அவதாரம் தான் இந்த ஐயப்பன் எனப் போற்றி வழிபடுவார்கள்.

கழுத்தில மாலையும் தலையில் இருமுடியும் இருந்தால் எம்மதத்தவராயினும், எந்த தேசத்தவராயினும் 18 படிகள் கடந்து ஸ்ரீதர்மசாஸ்தாவான ஐயப்பனை தரிசித்து மகிழலாம்.



சர்வ சமுதாய நட்பின் எதிரொலி யாக இச்சபரிமலை யாத்திரை வருடா வருடம் ஒரு எழுச்சியாக மிகுந்து வருகின்றது

இநத சபரிமலை யாத்திரையின் பொருளைப் பற்றி சற்று ஆராய் வோம.

ஆர்த்திகமாகவுப், மானஸீகமாக வும், சாரீரகமாகவும் மானுடர் களுககு ஏற்படும இடர்களைக் களைய வல்லது இச்சபரிமலை யாத்திரை என பது மிகையாகாது. இக்கடினமான யாத்திரையை வருடநதோறும மன முவந்து ஏற்று கடைபிடித்து வரும் பக்த கோடிகளின் அனுபவங்களைக் கேட்க நேரிடும் போதும, அதையே அனுபவத்திலும் உணர நேரிடுபவர் களுக்கும் மாத்திரமே அதன் முழுப் பரிணாமமும புலப்படும்.

நாத்திகவாதம் மேலோங்கியுளள இக்காலக் கட்டததில், அவர்களின எதிர்ப்புகளைப் பொருட்படுத்தாமல் வருடா வருடம் கூடிவரும் ஜனத் திரளை நோக்கும்போது ஏதோ ஒரு ஆதமீயதானுபூதி அவர்களுக்கு அந்த சபரிமலை யாத்திரையில் கிடைக்கின் றது என்பது உறுதியாகின்றது.

இயல்பாகவே இந்துக்கள் புராணப் பற்று நிரமபப பெற்றவர்களாகவே காணப்படுவர். குறிப்பிட்ட சிலர் புராணங்களில் வருணித்துளளபடி உள்ளும் புறமும் தூய்மையாய் வாழ்ந்து இறைவனுக்குச் சமமாய்ப் போற்றப்பட்டு இநது மதத்தைச் சிறபபித்துளளனா.

மேற்குறிப்பிட்டபடி தெய்வாம் சத்துடன ஹரிஹர புததிரனாய் உல கில் தோனறி, தருமத்தை சாஸித்து, ரக்ஷிதது மககளை நல்வழி நடத்தும் ஐயப்ப சாஸ்தா என கந்த புராணத் தில் இவரைப்பற்றி விவரிக்கப்பட் டுள்ளதைச் சற்று நோக்குவோம்.

**'மஹா சாத்தாப்படலம்' - கந்தபுராணம**

**திருபபாறகடலைக் கடைதல் :**

முன்னொரு காலத்தில திருமால் முதலிய தேவர்கள், சிவபெருமான் திருவருளைப் பெறுமல் திருப்பாற் கடலைக் கடைந்தார்கள். அப் பொழுது அதனின்றும் ஆலகால விஷம் எழுந்தது. அதனைக் கண்டு தேவர்கள் அனைவரும் நடுநடுங்கி ஓடிக் கயிலாயமடைந்து சிவபெரு மானை வணங்கித் துதித்தார்கள். சிவ பெருமான், அவர்களுக்கு அபய மளித்து, விஷத்தைத் தாம் உண்டு, கண்டத் தடக்கி அவர்களைக் காத்துத் திருமால் முதலிய தேவர்களை நோக்கி "இன்னும் பாற்கடலைக் கடையுங்கள்; அமுதம உண்டா கும்" என்று பணிததருளினார். திருமால் முதலிய தேவர்கள் பாற் கடலை முன்போலப் பினனும் கடைந் தார்கள். கடையத் துவங்கியபோது விநாயகக் கடவுளை வழிபாடு செய்ய வில்லை. அதனால், மந்தர மலையாகிய மத்துக் குலைந்து பாதலத்தில் ஆழ்ந் தது. பிறகு விநாயகக் கட வுளுடைய திருவருளால் மந்தர மலை பாதலததினின்று வந்து முன் போல நிலை பெற்று நின்றது.

**அமுதமும் மோகினியும் தோன்றுதல் :**

திருமால் முதலிய தேவர்கள் மகிழ்ந்து மேலும் பாற்கடலைக் கடைய, பொற்குடத்தோடு அமிர்தம் எழுந்தது. அங்கு நின்ற தேவர் களும் அசுரர்களும் தனித்தனியே, 'இஃது எங்களால் வந்தது; ஆத லால் எங்களுக்கே உரியது' என்று கூறி, ஆரவாரஞ் செய்து அதனால தங்களுககுள் மாறு படடுப போர் செய்ய எண்ணினா கள். அதனைத் திருமால் கண்டு, அவர்கள் பிணக்கை ஒழிக்க நினைந்து மூவுலகத்தாரும் விரும்பும் ஒரு மோகினி வடிவை எடுத்து நினறார். அம்மோஹினியின் அழகைக் கண்ட அவுணர்கள் அமிர்ததைத விட்டு விட்டு காமப்பித்துக கொண்டு அறி விழந்து மயங்கி நின்றார்கள். தேவா கட்கும் மோகினியிடத்திலே காதல் உண்டாயிறறு.

**திருமால சூழ்ச்சி:**

இவ்வாறு இருதிறத்தாரும் மயங்கி நிற்கையில், மோகினி வடிவங் கொண்ட திருமால அவர்களை நோக்கி "நீங்கள போரை ஒழிமின்; இங்கு நான் இருக்கிறேன்; அமிர்தமும இருக்கிறது. இவ்விரண்டினுள் நீர் விரும்பிய தொனறை விரைந்து கைக்கொள்ளுங்கள்" என்றார். அசுரர்கள் மோகினியைப் பார்த்து "எங்கட்கு நீதான் வேண்டும்" என் றார்கள். தேவர்கள் அமிர்தத்தைத் தூக்கிக்கொண்டு ஒருபுறம சென்றார் கள். அசுரர்கள மோகினியை அழைத்துக் கொணடு போனார்கள். தம்மை அழைததுச்சென்ற அசுரர் களை நோக்கி மோகினி வடிவங் கொண்ட திருமால், "சயனத்தில் என்னைத் தழுவ வல்ல வீரன் ஒருவன் உளனோ? அவனை இன்னும் கண்டி லேன்". என்று கூறினார். அசுரர்கள் ஒவ்வொருவரும் இவ்வார்த்தையைக் கேட்டு 'நானே எவரிலும் வலியேன்' 'வீரனும் யானே' என்று தனித்தனியே கூறி, 'என்னையே சேர் வாய' என்று வந்து கூடி, அதனால் பகை மூண்டு தம்முள் சண்டையிட்டு இறநதார்கள.

**கள்ளத்தேவர்கள் அமிர்தம உண்ணல்:**

அசுரர்களில் இருவர் திருமாலின் மாயச சூழ்ச்சியை அறிந்து கொண் டார்கள். 'யாமும் மற்றவர்களைப் போல் வீணாய்ப் போர் செய்து இறத்தலாகாது' என்று உறுதி செய்து தேவ வடிவங்கொண்டு தேவர் களோடு போய்க் கலந்து நின்றார் கள். அசுரர்கள் தம்மில் பொருது அழியக் கண்ட திருமால் மோகினி வடிவத்தை விடுத்துத் தம் பழைய வடிவைக் கொண்டு தேவர் கூட்டத் துள் சென்றார். தேவர்களுக்கு அமிர் தத்தைப் பங்கிட்டுக் கொடுத்தார். தேவ வடிவத்திலிருந்த அவுணர்கள் இருவரும் தங்களுக்குத் திருமால் கொடுத்த அமிர்தத்தை உரிய மந் திரத்தோடு உட்கொளளாமல் தேவர் களுக்கு முநதி விரைநது உட்கொண் டனர்.

**கள்ளத்தேவர்கள் கிரகங்கள் ஆதல்:**

அதனைச சூரிய சந்திரர்கள் கண்டு 'இவர்கள கள்ளத்தேவர்கள்' என பதைத் திருமாலுக்குக் கண்ணால் குறிப்புக் காட்டினார்கள். திருமால் அவர்களைக் கண்டு, கோபிததுக் கையிலிருந்த அகப்பையினால் அவர் களின் தலையில் அடித்துத் தலையைத் துண்டாக்கினார். உண்ட அமிர்தம் கடைததை அடையுமுன் தலைகள் துண்டிக்கப்பட்டமையால், அவர்களு டைய உடல்கள் அழிந்தும், தலைகள் அழியாமலும் இருந்தன. தலைகள அழியாத அவ்விருவரையும் நோக்கி

திருமால் 'நீங்கள் அமிர்தம் உண்டமையால் விண்ணுலகில் இருக்கத் தகுந்தவர்கள்' என்று சிந்தித்து, 'சிவானுகிரகத்தினுலே நீங்கள் கிரகங்களாகுதிர்' என்று பணித்தார். அவர்கள் இருவரும் சிவபெருமான் அருள் பெற்று இராகு, கேது என்னும் பெயருடைய கரும்பாம்பும் செம்பாம்புமாகித் தம்மைக் காட்டிக் கொடுத்த சூரியனையும், சந்திரனையும் ஒவ்வொரு காலத்தில் மறைத்து, சூரியன் முதலிய ஏழு கிரகங்களோடும் தாமும் சேர்ந்து ஒன்பது கிரகங்களாக எண்ணப்படுவாராயினர்.

சிவபெருமானும் மோகினியும்:

திருமால் தாம் முன்பு கொண்ட மோகினி வடிவத்தோடு திருப்பாற் கடலின் கரையில் அமர்ந்திருந்தார். சிவபெருமான் அவரைப் பின்பற்றி நாவலந்தீவில் வடதிசையின் கடற் கரையிலுள்ள சாலமர நிழலை அடைந்தார். அங்கே மோகினி வடிவங் கொண்ட திருமால் தன் மேல் காதல் கொண்ட எம்பெருமானுடன் இன்புறக் கூடினர்.

சாளக்ராமம்:

அவர்கள் இருவரும் கூடிய காலத்துக் கான்று உமிழ்ந்த நீர் 'கண்டகி' என்னும் நதியாகப் பாய்ந்தது. அந் நீரிலே வச்சிரதந்தி என்னும் புழுக்கள் உள்ளும் புறமும் சக்கரக் குறியோடு பொன் வண்ணமாய் வரிசை வரிசையாகத் தோன்றின. அப்புழுக்கள் கண்டகி நதியிலுள்ள மண்ணினல் கூடுகள் உண்டாக்கும். அக்கூட்டினில சில நாள் தங்கி வசித்து இறக்கும். இறந்தபின் அக்கூடுகள் சக்கரக் குறியுடையன வாய்க் காணப்படும். அவற்றை கண்டகி நதி, கரையில கொணடு வந்து ஒதுக்கிவிடும். அக் கூடுகளை உலகத்தார் எடுத்துச் சென்று அதனுள்ளே இருக்கும பொன்னை எடுத்துக் கொளவர். அவற்றின் குறிகளைப் பாரத்து இன்ன இன்ன முகூர்த்தம என்று பிரித்தறிந்து கொளவா. அவற்றைத திருமாலாகவே நினைத்துப பூசிப்பார் கள். அதன் பெயா 'சாளக்ராமம்' என்பதாம்.

ஐயனுர் தோற்றம:

சிவபெருமானும், திருமாலும் கூடிய காலத்துக் கரியமேனியும், சிவந்த சடையும், செண்டு ஏந்திய கையுமாய் உக்கிரத்தோடு ஒரு குமாரர் அவதரித்தார். சிவபெருமான் அவருக்கு 'அரிகர புத்திரன்' என்னும் பெயரைச் சூட்டினர். பல வரங்களைத் தந்து, உருத்திரர்களுள் ஒருவராக்கினர்; ஒரு புவனத்தைக் கொடுத்துத் தேவர்களும் முனிவர்களும் வணங்கும் முதன்மையோடு அப்புவனத் தலைவராக்கினர். பிறகு சிவபெருமான், திருமாலுக்கும் ஐயனுருக்கும் விடை கொடுத்து மறைந்தருளினர்.

வழிபாட்டு முறை.

உலகக் காவல்தெய்வமாகப் போற்றப்படும் இந்த அரிகரசுதருக்குப் பல திருநாமங்கள் உண்டு. ஐயனுர், ஐயப்பன், ஆர்யாபன், ஆரியதாதன், தாரகப்ரபு, மகா சாஸ்தா, ஸ்ரீதர்ம சாஸ்தா, முனியாண்டி, முனீச்வரன், குர்ரப்பா, முக்தீச்வரநாத், மதுரை வீரன், வில்லன், வில்லாளன், வீர மணிகண்டன் முதலியன அவற்றுட் சிலவாகும்.

யுகங்கள்தோறும் வீற்றிருந்து காவல் புரியும் தெய்வமிவர் என்பது மிகையாகாது. துஷ்டக்ரகங்களை அடக்கி ஆளும் பூத நாதனுகவே எண்ணி வழிபடுவோர் பல கோடியுண்டு. இராமாவதாரத்திற்கு முன அவதாரமாகிய பரசுராமர் இவருக்கு உலகின் பல இடங்களில் பிரதிஷ்டைகள் ஏற்படுத்தி இவரை தர்ம ரக்ஷக மூர்த்தியாய பாலிக்கப் பணித்துள்ளார் முக்கியமாக கேரள தேசத்தின பல பாகங்களிலும் சாஸ்தா ஆலயங்கள் பரசுராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. அவற்றுள், அச்சன் கோயில, ஆரியங்காவு, குளத்துப் புழை, எருமேலி, சபரிமலை என்னும் சாஸதா ஆலயங்கள் பிரஸித்தி பெற்றவையாகும். மானுட தருமத்தை நிலை நாட்டவே மானுடனுய அவதரித்த ஐயன ஐயப்பன, மானுட வர்ணுச்ரம தத்துவங்களாகிய (மனிதனின ஐந்து நிலைகளாகிய) பால்யம, கௌமாரம், யௌவவனம, வார்த்திகம், வானப்ரஸதம் போன்ற நிலைகளில மேற்குறிப்பிட்ட ஐந்து க்ஷேத்திரங்களில காட்சி தந்து பக்தர்களை பாலிக்கின்ருர். சபரிமலைக் கோவிலில் மனிதனின ஐந்தாவது வீடாகிய வானப்ரஸ்தாச்ரம நிலையில (சர்வமும ஒழித்த சன்யாஸ நிலையில, ஆசையை ஒழித்து தன்னையே சரண் புக வரும் அடியார்களைக் காக்கும் துரிதத்தில் மட்டபந்தம் பூண்டு இடக்கரத்தால் தேவனையும் ஜீவனையும் ஒன்றெனக் காட்டும் சின் முத்திரைதாரியாய் பக்தர்களுக்காகவே தவக்கோலவடிவங்கொண்டமர்ந்துள்ளார்.

அகத் தூய்மையுடன் தனக்குத் தானே ஆத்ம விசாரணை செய்து கொண்டு, புத்தியை பக்தி மார்க்கத்தில் செலுத்தி, சமத்வாதி குண நலன்கள் கொண்டு விளங்கும் குருமுகாந்தரமாய் மாலை அணிந்து, பிரம்மசரிய விரதம் காத்து, இருமுடி சுமந்து பெருங்காட்டு வழி கடந்து, பாவம் தீர்க்கும் புனித பம்பையாற்றில் நீராடி, தத்துவ வடிவாய், சத்தியத் திருஉருவாய் விளங்கும் பதினெட்டுத் திருப்படிகள் கடந்து, பரமனின் திருச்சன்னதியில் விருப்பு வெறுப்புகளைக் கடந்த பற்றற்ற நிலையில், மனோ வாக் காய மனைத்தாலும் செய்யும செயல்கள் அனைத்தையுமே பரமனுக்கு அர்ப்பணித்து அவன் மலரடியில் சரணுகதி அடையும் பக்தர்கள் அனைவரையும் கருணைக் கடலான மணிகண்ட தேவன் அவர்களது குறைகளை மன்னித் தாட்கொண்டு, தேவர்கள் பூஜிக்கும் காந்தமலை உச்சியிலிருந்து ஜீவன் முக்தி நாயகனுய், ஜோதியின் வடிவாய் காட்சி தந்து ஞான ஒளியில் ஜோதியாய், தனது அருளென்னும் அமுதத்தைப் பொழிந்து மானுடர் வீடு பேற்றிற்கு அருள் தருவான் என்பது திண்ணம்.

'தேவர்கள் உறையும் காந்தமலை உச்சியில் பொன்னம்பலத்தில் இரத்தின சிம்மாஸனத்தில் அமர்நது. வைர சிம்மாஸனத்தில் திருக்கா லூன்றி உமது கடைககண் பார்வையால் இப்புவி முழுவதும் பாலித்துக் காத்து வரும எங்கள் தேவா! நாங்கள அறிநதும், அறியாமலும், தெரிந்தும், தெரியாமலும் செய்த சகல விதமான குற்றங்களையும் பொறுத்துக் காத்தருள வேணடும்.'

சாமியே சரணம்! சரணம்!!
ஐயப்பா!!





அஷ்டபுஜம் கோயில்-காஞ்சிபுரம்.

# திருவரங்கன் விடு செய்தி

வைகுண்ட ஏகாதசித் திருநாளன்று திரளாகத் திருவரங்கம் செய்து அரங்கனைச் சேவித்தோம். ஈண்டு அவ்வரங்கமாநகருளான் - மக்கட்கு விடுக்கும் செய்தி யாது என ஆதாரங்களைக் கொண்டு ஆய்வு செய்வது சாலப் பொருத்தமே

1. அவனது முதற்செய்தி "நானே திருவெட்டெழுத்து: நானே காயத்ரி; நானே வேதம்: நானே பரமபொருள்'

திருவரங்கத்தந்தாதி (28) இல் 'இருநால் அக்கரம்' என்று அரங்கனைக் குறிப்பிடுதல் நோக்கற்பாலது.

மேலும் அஷ்டாக்ஷரத் திருமந்திரத்தினில், ஸ்ரீரங்க விமானம் பிரணவத்தையும், ஏழு மதில்களும் மற்ற ஏழு எழுத்துக்களையும் குறிக்கின்றன என்பர். தவிர, சந்தன மண்டபத்திற்கு ஏறும் படிகள் 'அஷ்டாக்ஷரப்படி' என அழைக்கப்படுகின்றன.

கர்ப்பக்கிருஹத்திற்கு முன் இருக்கும் மண்டபம் 'காயத்ரி மண்டபம்' என்ப் பெயரிடப்பட்டிருக்கிறது. அதில் 24 தூண்கள் உள்ளன. அதே 24 எழுத்துக்கள் கொண்டது காயத்ரி மந்திரம்.

விமானம் ஓம்கார வடிவத்தில் அமைந்திருப்பதால், வேதஸ்வரூபமாகிறது. வேதஸ்வரூபியெனில், பரம்பொருள் தானே.

2. அவனே பரம்பொருள் ஆதலின், அவனது அடுத்த உபதேசம 'என்னைத் தொழுதெழு' என்னும் உய்யும் ஆறு.

தன்னிடம் ஈடுபாடு இல்லாதார்க்கும் அவரது நன்மை கருதி தன்பால் ஆசையை உண்டாக்கித் தன்னை நாடச் செய்யப்பல முறைகளைக் கையாளுகிறான் அரங்கத்தம்மான். உதாரணமாக, வைகுண்ட ஏகாதசிக்கு முன்தினம் மோகினி அலங்காரம் பூண்டு நம்மை மயக்குகிறான், அன்றோ? ஏகாதசியன்று நம்பெருமாள் ரத்னாங்கி சாத்திக் கொண்டு நம்மை ஈர்க்கிறான். பிறகு பெரிய பெருமாள் அழகிய முத்தங்கியுடன் சேவை சாதிக்கிறார். வருஷம் முழுவதும் வெளியே புறப்படும் பொழுதெல்லாம் தனக்கே உரிய நடை அழகினாலும் நம்மைத் கவர்கிறான் ரங்கன். அவனைப் பாரோம் என்று பாராமுகமாய் இருப்பவர்களுக்கும் ஒருநாள் தன் பேரில் அன்பு வரலாகாதா என்று எதிர்பார்த்து, மனமாற்றம் செய்விக்க முயலுவது அவன் சங்கல்பம்.

ஆகவேதான், 'எல்லோரும் தங்களது கவலைகளையும், பிரச்னைகளையும் என்னிடம் ஒப்படைக்கும் வரை நான் விழியேன்' எனச் சொல்லாமற் சொல்லிக் கொண்டு "உறங்குவான் போல் யோகு" செய்கிறான் திருவரங்கச் செல்லன். தற்கால சத்தியாக்கிரக முறையை கடைப்பிடிக்கிறான் போலும்!

3. அப்படி அவனை அண்டினால் என்ன கிடைக்கும் என்ற வினா எழுமல்லவா? அதற்குப் பதிலாக அமைகிறது அடுத்தச் செய்தி. "உங்களுக்கு மோக்ஷம் உறுதி" என்கிறான் ரங்கராஜன்

அரங்கனுக்கு ஆட்பட்டால் முத்தி சித்திக்கும் என்கிறது திருவரங்கத் தந்தாதி (31). இப்பாவனமான ஸ்தலம் பாபங்களைப் போக்கக் கூடியது? அதனாலேயே இங்கு வசிப்பவர்களுக்கு மறுபிறவி கிடையாது (பாதுகா ஸகஸ்ரம்—994)

அரங்கர் கையில் ஏந்தியிருக்கும் வலம்புரிச்சங்கம் மோக்ஷத்தை அளிக்கும் என்பர்.

சயனமூர்த்தி தன் இடது திருக்கையினால் தன திருவடிகளே நமக்குப் புகலிடம் என்ற சரணாகதி தத்துவத்தை விளக்குகிறார். தவிர, 'என் திருவடிகளைப் பற்றினால் முக்தி நிச்சயம்' என்று ஞாபகப்படுத்தவே நம் பெருமாள் பாதுகையுடன் காட்சியளிக்கிறான.

இக்கோயிலுள்ள பெரிய கோபுரங்கள் நம்முடைய சிறுமையை உணர்த்தி, அகங்காரத்தை நீக்கி, மோக்ஷத்திற்கு அடிகோலுகின்றன.

மேலும் பெரிய பெருமாள் யோக சயனமூர்த்தியாக அமைந்திருப்பதும் இச்செய்திக்கு மற்றோர் சான்றாகும்.

நம் பெரிய கோயிலின் மிகச் சிறப்பான உத்ஸவம வைகுண்ட ஏகாதசியே. அப்பொழுது அரஙகன் தன் பக்தர்களை பரமபதவாசல் வழியாக அழைத்துச் செல்வது கண்கொள்ளாக் காட்சி. அரங்கன மோக்ஷாதிகாரி என்பதற்கு வேறு சானறும வேண்டுமா?

'என்னை ஆச்ரயித்தவருக்கு ஜாதி: குல, வகுப்புவேறுபாடின்றி மோஷம நிசசயம்' என்பதே அவனுடைய செய்தி.

பக்தன் இக்கோயிலுக்குள் நுழைநதவுடனேயே வைகுண்டம் அடைந்து விட்டோம் என்ற உணர்வு உண்டாகிறது. ஏன், இத்தலத்திற்கு மறு பெயரே "பூலோக வைகுண்டம்"

திரு. எஸ். வாஸுதேவன்,
எம்.ஏ., எம்.எட்., எம்.ஆர்.எஸ்.டி.
(லண்டன்)
திருவரங்கம்.

தானே. தவிர, வைகுண்டத்தில் உள்ளதாக நம்பப்படுவது போல், இங்கும் ஏழு ஆபரணங்கள். (ஏழு பிராகாரம் கொண்ட கோவில்களை 'உத்தமோத்தம்' வகையில் கோயில் அமைப்பு நூல்கள் சேர்க்கின்றன என்பதையும் நினைவில் கொள்ளுதல் அவசியம்) மேலும் வைகுண்டம் போலவே இக் கோவிலிலும் திருமா மணி மண்டபம், மணிக்கதவம் எல்லாம் உள்ளன. வாயில் காப்போர் இங்கும் ஜய, விஜயர்கள்தான். காவிரியே விரஜாநதி. ஆகவே கோயிலுக்குச் செல்லும் வழியே வைகுண்டம் போகும் 'அர்ச்சிராதி' மார்க்கம் என உள்ளே செல்பவருக்குத் தோன்றும்.

4. "முக்தி வரட்டுமய்யா. ஆனால் இந்த ஜன்மத்தில் வாழும் வரை சுகமாக இருக்க வேண்டாமா?" என்பாரும் உளர் அன்றோ? அவர்களுக்கு 'இம்மையிலும் சுகம் அளிப்பேன்' என்கிறார் அரங்கநகரப்பன்.

இதற்கு ஆதாரம் கூறுமிடத்து, இத்தலத்திற்கு 'போகமண்டபம்' (ஆசார்ய ஹ்ருதயம்—85) என்ற பெயரும் உண்டு. அரங்கனின் திருவடிகளை அண்டுவோர்க்கு இஷ்ட ப்ராப்தியும், அநிஷ்ட நிவிருத்தியும் நேரும் என்பது நம் பெரியோரது துணிவு.

மேலும் ஆகமவிதிப்படி சயன மூர்த்தியின் திருமுடி மேற்கு திசையில் காணப்பட்டால், அது அமோகத்திற்கு அறிகுறியாம்.

5. ஐந்தாவதாக, பெருமாள் "நாமிருக்க பயமேன்? அஞ்சற்க" என்று அபயம் அளிக்கிறார். இதற்குச் சான்றாக, நம் பெருமாளின் அபய ஹஸ்தத்தைக் குறிப்பிடலாம்.

6 கீதாசார்யன் வறபுறுத்திக்கூறியுள்ளதுபோல, அரங்கனும் "எனக்கு யாவரும் சமமே" (பகவத் கீதை 9-29ம், 9-32ம்) என்கிறார். இன்று பேசப்படும் Egalitarian Concept-ஐ நினைவூட்டுகிறது. அடியார்களின் குலம், ஜாதி பாராது வழிபடவேண்டும் என்று ஸ்ரீரங்க நாதனே அந்தணர்களுக்கு உபதேசம் செய்தாராம். அரங்கேசனின் செய்திகளை உணர்த்த வல்லார் ஆழ்வார்களைத் தவிர வேறு யார் உளர்? அவர்களையே கேட்போம்.

பழுதிலா வொழுக லாற்றுப்
பலசதுப் பேதி மார்கள்,
இழிகுலத் தவர்க ளேனும்
எம்மடி யார்களாகில்
தொழுமினீர் கொடுமின் கொண்மின்!

என்கிறார் தொண்டரடிப் பொடியார் (திருமாலை 42)

உபதேசத்தோடு மட்டும் நிற்காமல், திருப்பாணாழ்வார் விஷயத்தில் அரங்கன் செயலிலும் ஈடுபட்டு 'தீண்டாமை விரட்டிய திருமால்' ஆனது யாவரும் அறிந்ததே. "தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கும் நீர்மை அரங்கநாதனிடம் மிக்குள்ளது"

மேலும் மாறனைத்தான் 'நம்மாழ்வார்' என்றான் அரங்கன்.

திருவரங்கனின் கோயிலின் அன்றாட ஊழியங்களில் எல்லா ஜாதியினருக்கும் இடமுண்டு. இதற்குச்சான்று திருவரங்கத்தில் இன்றும் உள்ள 'சாத்தார வீதியே'. பூணூல் சாத்தாதார்களுக்காக ஏற்பட்ட வீதி இது. "சாத்தாதார் வீதி" நாளடைவில் 'சாத்தார வீதி'யாயிருக்கவேண்டும்.

ஏன், மதம் கூட கருதாது, சுல்தானியை அழகிய மணவாளன் மணக்கவில்லையா?

அந்தஸ்து அடிப்படையிலும் பாகுபாடு கிடையாது என்பதை 'ராஜமகேந்திரன் சுற்றில்' இருக்கும் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் நினைவூட்டுகிறார்.

7. 'ஒருவனே தேவன்' என்கிறான் திருவரங்கன்.

இவ்வுண்மையை பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் மூலமாக நமக்கு வலியுறுத்துகிறார். 'அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனைப் பாடேன்' என்ற திடம் கொண்டார் இப்பெரியார். அரங்கன் மீது கொண்ட அன்பு மிகுதியால் ஏற்பட்ட அபசாரத்திற்கு அவருக்குக் கண்டமாலை என்ற கொடும் நோய் கண்டது. உண்மை கண்டார். மனம் மாறினார்.

இந்தத் தத்துவத்தை உலகத்தாக்குப் புலப்படுத்தவே திருப்பதி ஸ்ரீநிவாஸனின் திருவுருவம் இன்னும் கோவிலின் இரண்டாம் திருச்சுவற்றை அலங்கரிக்கிறது.

8. எம்பெருமானின் கடைசி செய்தி சேவை செய்ய வருபவர்களுக்கு விடுத்ததாகும்.

"சேவைக்கு என எங்கு போனாலும் உங்களிடையே சண்டை கூடாது." என்பதை அறிவுறுத்துகிறான். இது தற்போது நடப்பதை அப்படியே பிரதிபலிக்கிறது.

பாம்பும், கருடனும் இயற்கை விரோதிகள். ஆயினும் நம் அரங்கநாதன் ஆதிசேஷனைத் தனது படுக்கையாகவும், கருடனை வாகனமாகவும் வைத்துக்கொண்டு, சேவை செய்ய முற்படுவோர்க்கு ஒரு படிப்பினையைப் புகட்டுகிறான்.

இனி, "என் சம்மந்தத்தால் எவ்வித பகையும் ஒழியும்" என்ற கருத்தையும் விளக்குவதாகவும் கொள்ளலாம்.

இச்செய்திகளைப் பார்க்குமிடத்து அவை தற்கால சூழ்நிலைக்கு மிகவும் ஏற்புடைத்தாதல் காணக.



# இறை பேதங்கள்

உண்மையான பக்தனொருவன் கடவுளிடம் பேதம் பாராட்டுவதில்லை. எந்த உருவத்தையும் பேதமின்றி வழிபட்டு அதில் மெய்ப்பொருளைக் காண்பான். கடவுளை அறிய ஆழ்ந்த பக்திதான் அடிப்படை.

ஆஸ்திகர்களிடையே இறைவனைப் பற்றிய பேதங்கள நிலவி வருவது வருந்தற்குரியது. குறிப்பாக, பாரம்பர்ய கீர்த்தி வாய்ந்த நம் இந்து சமயத்தின் இரு பெரும் தூண்களான வைஷ்ணவமும்,சைவமும் இத்தகைய பாகுபாட்டுக்கு ஆளாவது பொருத்தமற்றது.

இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், இவர்கள் வழிபட்டு வரும் முன்னோர்கள எவரிடமும் இத்தகைய பகையுணர்ச்சி காணப்படவில்லை.

மாறாக, வைஷ்ணவ அறிஞர்கள் சிவனையும், சைவ அறிஞர்கள் விஷ்ணுவையும் ஒன்றெனவே கண்டு வழிபட்டனர். அவர்தம் கருத்துக்களில் பேதமும் காணப்படவில்லை

திரு. வி. ராதாகிருஷ்ணன்,
சென்னை-15

பக்தர்கள் அவரவர்க்கு இஷ்டப்பட்ட வடிவத்திலும் இறைவனை வழிபட்டாலும், அவர்கள் எண்ணிய படியே தன்னை அமைத்துக்கொண்டு அருள் புரிவான் கருணைக்கடல் என்கிறார் ஆழ்வார்.

"தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்— தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ண மாழியானும்"

ஸ்ரீராமானுஜர் ஒருநாள் ஸ்ரீரங்கத்தில் அட்சய பாத்திரம் எடுத்துத் தெருவில் போய்க் கொண்டிருந்தார். அப்போது வீதியில் விளையாடிக் கொண்டிருந்த சிறு குழந்தைகள் சிலர் மண்ணில் காலாலே கீறி, "உம்முடைய எம்பிரான் திருமேனி இது" என்று காட்ட, உடனே பாத்திரத்தைக் கீழே வைத்துத் தண்டனிட்டருளினாராம் ராமானுஜர்! பின் அந்தக் குழந்தைகள் பெரிய திருமண்டபமும் பெருமாளும் நாச்சியாரும் மண்ணில் கோடு கிழித்துக் கற்பித்து, பெரிய கோவில் நிவேதன வழக்கத்தைப் போல் துணி பரப்பி. அதன்மேல் அன்னத்தை ராசியாகக் குவித்து அமுது செய்விப்பது போல், விளையாட்டு நிவேதனம் செய்து, "எம்பெருமானே, பிரசாதத்தை ஏற்றுக் கொள்ளும்" என்று தெரு மணலைக் கையால் முகர்ந்து எடுத்துக் கொடுக்க, உடையவர் அதைப் பாத்திரத்திலே ஏற்றார்! குழந்தைகள் காலால் கீறிய மேனியே உடையவருக்குத் திருமாலாயிற்று. அவர்கள் எடுத்துக் கொடுத்த மணலே உவந்த பிரசாதமாயிற்று!

"பொன்திகழு மேனிப் புரிசடையம புண்ணியனும்
நின்றுலகம தாய நெடுமாலும்— என்றும
இருவரங்கத் தால்திரிவ ரேனும் ஒருவன்
ஒருவனங்கத் தென்று முளன்"

'பொன் திகழும் திருமேனிப் புரிசடையம புண்ணிய'னை சிவனும் திருமாலும் முறையே அவனவன் வடிவத்தில் நின்று திருவிளையாடல் செய்தாலும் ஒருவன் உடலில் மற்றொருவன எப்போதும் உளன்" என்கிறார் ஆழ்வார்.

"அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்
அவரவ ரிறையவ குறைவிலாரிறையவர்
அவரவர் விதிவழி யடையநின் றனரே"

"அவரவர் தத்தம் அறிவுக்குத் தக்கபடி அந்தஅந்த தேவதையை ஈசன் என்று தொழுவார்கள். அந்த அந்தக் கடவுளும் தன்னை ஆராதிப்பவர்க்கு வேண்டிய பலனைக் கொடுக்கத் தவறுவதில்லை" என்கிறார் நம்மாழ்வார்.

"ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முக னரனென்னு மிவரை
ஒன்றநும் மனத்துவைத் துள்ளிநும் மிருபசை யறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே"

பரம்பொருளின் இலக்கணம் நம் உணர்வுகட்கு அடங்காதது. ஒன்று, பலவா என்றறிய முடியாது. நாரணன், நான்முகன், அரன் என்று பல பெயர் கொண்ட இந்தப் பரம்பொருளை மனதால் ஆழ தியானித்து விருப்பு, வெறுப்பு என்ற இரு பசைகளையும் நீக்கி, ஈசனிடத்தில் பக்தி பண்ணுங்கள் என்கிறார் ஆழ்வார்.

திரிபுரத்தை எரித்த சிவன் நாராயணனுடைய வலதுபாகம். சதுர்முகப் பிரம்மாவும் அவன் படைத்த உலகங்களும் திருமாலின் நாபிக் கமலத்தில் அடங்கும். பின்னும் உலகத்தில் மக்களின் கண்ணுக்குப் புலனாகும் படி சர்வேஸ்வரன் அவதரிக்கவும் செய்கிறான். தவிர, இவ்வளவும் அவன் வயிற்றில் அடங்கிக் கிடக்கும். இவையனைத்தும் பரமாத்மாவின் திருவிளையாடல்கள்.

"ஒருவ னிருவ ரோர்மூவ ரெனநின்று
உருவுகரந் துள்ளுந் தோறும தித்திப்பான்
திருவமர் மார்பன் திருக்கடித் தானத்தை
மருவி யுறைகின்ற மாயப்பிரானே"

'திருக்கடித்தானம்' என்ற புண்ணிய ஸ்தலத்திலுள்ள கோயிலில் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுத்துக் கொண்டிருக்கும் பெருமான் ஒருவனாகவும் இருவராகவும் மூவராகவும் இருக்கிறான். தன் உருவை மறைத்து ஜீவன்களின் உள்ளத்திலும் உறைகிறான். ★

சென்ற இதழ் தொடர்ச்சி......

#  பீஷ்மரின் ப்ரம்மசர்யம் 

நாவல்பாக்கம ஸ்ரீ தேவநாதாச்சாரியர்
திருபபதி.

அப்போதுதான், தனக்குப் புத்திர ஸந்தானம் இல்லாமல் போய்விடுவதை எதிர்பாாத்து, அஃதில்லாமல் போனாலும் தனக்குப் புண்ணியலோகங்கள் திண்ணம் கிடைககும என்று கூறுகிறார். திருமணமாகி மனைவியுடன் இருககுமொருவன், தனக்கு மனைவியுடன் சேர்க்கை ஏற்படுவதன் மூலம் புத்திர ஸந்தானம் உண்டாகுமென்று எதிர்பார்ப்பது இயற்கை. அப்படிப்பட்டவன்தான், தான் மேற்கொள்ளப்போகும் ''ப்ரம்மசர்யத்தால் தனககுபபுததிர ஸந்தானம் இல்லாமல் போயவிடும'' என்று அஞ்சுவான். பீஷ்மருடைய ப்ரமமசர்யம் இதே ஸநதர்ப்பததில்தான தோன்றியது.

'अपुत्रस्य गतिर्नास्ति' என்பது சாஸ்திர வசனம். ''பிள்ளையில்லாதவனுககு நற்கதியில்லை'' என்பது கருத்து. இதொன்றுமட்டுமிலலை. இத்துடன் மற்றுமிரண்டுமுள்ளன.

**மூன்று கடன்கள்**

**''जायमानो वै ब्राह्मण स्त्रिभिरृणवा जायते ब्रह्मचर्येण ॠषिभ्यो यज्ञेन देवेभ्यः प्रजया पितृभ्य एषवाऽनृणो यः पुत्री यज्वा ब्रह्मचारिवासी''**

(தைத். ஸம்ஹிதை)

என்பது வேதவாககியம. ''இவவுலகில் பிறககுமபோது ஒவவொருவனும் மூன்று கடனகளுடனேயே பிறககிறான. 1) ரிஷிகளின கடன. 2) தேவாகளின கடன, 3) பிதருககளின கடன. வேதஙகளை முறைபபடி அதயயன செயவதனால முதல கடன தீரும. யாகஙகளை அனுஷ்டிப்பதனால இரண்டாவது கடன தீரும. புததிரனை பெறுவதனல் மூனறாவது கடன தீரும'' எனபது கருதது இந்த வேத வாககியததினபடி மூனறு கடனகளையும தீர்த்துவிடடு இறபபவனுககே தான் புண்யலோகங்கள் கிட்டும். 'अपुत्रस्य गतिर्नास्ति' என்பது ஒன்றை மடடுமே சொன்னாலும், அதிலேயே மற்ற இரண்டும் கூறப்பட்டதாகவே கொள்ளவேணும்.

உண்மை இவவாறிருக்கையில், ப்ரமமசர்யத்தை ப்ரதிஜ்ஞை செய்த பீஷ்மர், தனக்கு மக்கட்பேறு இலலாமை ஒனறையே குறிப்பாக எடுததுக்கூறி, அதற்குப்பதிலையும சொலலுகிறார். தந்தையின் சிற்றின்ப வேட்கையைப் பூாத்திசெய்வற்காக, மகன் அதை அறவே துறககவேணடிய நிலை தோன்றியது. இந்தச்சவாலை மகாவீரனும் மகாதீரனுமான பீஷ்மர் தயஙகாமல ஏற்றுககொணடு தநதையின் காமத்தைப் பூர்த்திசெய்தார். இது மிகப்பெரிய தியாகமில்லையா? இதன்சக்தி, புத்திரஸநதான மற்றவனாகிவிட்டதனால ஏற்பட்ட குறையை ஈடுசெய்துவிடும் என்பது அவருடைய கருத்து. இதற்கு மற்றொரு பரிகாரமுமுணடு

**''भ्रातॄणामेकजातानामेक श्चेत्पुत्रवान्भवेत्।
सर्वे ते तेन पुत्रेण पुत्रिणो मनुरब्रवीत्॥''**

(மனுஸம்ருதி)

எனனும் தாமசாஸ்திர வசனபபடி, ''ஒருவருககுப் பிளளையாகப் பிறநதவாகளான பலருககுள, யாராவது ஒருவருக்குபபுததிர ஸநதான இருநதால், அதனாலேயே மறறவர்களும புத்திரனுளளவாகளாவாாகள'' சநதனு மகாராஜனுககு ஸதயவதியை இளையமனைவியாக மணம செயவித்தாா பீஷ்மா. அவனுடைய பிளளை விசித்ரவீர்யன. அவன பீஷ்மருககு பராதாவானான அவனுக்கு த்ருத ராஷ்ட்ரன—பாண்டு இவாகள புத்திராகள். இவர்களாலேயே பீஷ்மரும் புததிரனுள்ளவராகிவிட முடியும ப்ரம்மசர்ய ப்ரதிஞ்ஞை பண்ணும் போது, ஸத்யவதிக்கும் சந்தனு மகாராஜனுக்கும் திருமணமே ஆகவில்லையாயினும், பிறகாலத்தில் இப்படி ஏதாவதொரு நிகழ்ச்சியின மூலம் தான் பிள்ளையுடையவனாகக் கூடும் என்று மகாமேதாவியான பீஷ்மர் திண்ணமாக எதிர்பார்த்திருக்கக் கூடும். அதனால்தான் ''எனக்குப் பிள்ளையிலலாவிட்டாலும் புண்ணிய லோகங்களில் குறைவொன்றுமிராது'' என்று உறுதியாகக் கூறுகிறார் பீஷமர்

கடுமையான ப்ரம்மசர்யத்தை ஏற்றுக்கொண்டு விட்டதனால் தனக்குப்பிள்ளைப்பேறு இல்லாமல்போன குறையை இவ்வாறு பீஷ்மர் சரிக்கட்டிக்கொண்டு விட்டார். மற்றும் இரண்டு கடன்கள் உள்ளனவே! அவற்றையும் தீர்த்தால்தானே நல்ல கதி கிடைக்கும்? பீஷ்மரின் நிலையில் இதற்கும் பரிகாரம் இருந்திருக்கிறது அதை இனி விவரிப்போம்.

ரிஷிகளின கடன் பீஷ்மருக்குத் தீர்நதுபோயிறறு. இவர் வேதங்களை (தனுாவேதமுளபட) நன்றாக, குருகுலவாஸம பணணி அதயயனம் செயதவா அதனால் இந்தக்கடன தீாநதுவிடடது

தேவாகளின கடன—யாகங்களைப் பண்ணுவதனால்தான தீரும். பீஷ்மர் பறபல யாகங்களையும பண்ணினதாக அறியபபடுகிறது அதனால் தேவர்களின கடனும இவருககில்லை. இப்படியாக மூனறு கடனகளையும தீர்த்துவிட்டதனால் அனநதமான புண்யலோ

கங்கள் தனக்குத் தங்குத் தடையின்றிக் கிடைக்கும்மென்னும் திட நம்பிக்கை இவருக்குண்டு.

இதுவரை ப்ரம்மசர்ய ப்ரதிஜ்ஞையின் அடிப்படையில் பீஷ்மர் திருமணமானபிறகே ''ப்ரம்மசாரி'' யாக இருந்தார் என்பதை நிரூபித்தோம். இனி மற்றைய வழிகளில் இழிவோம்.

பீஷ்மர் பலயாகங்களையும் பண்ணியிருக்கிறார் யாகம் செய்வதற்கு மனைவியின் துணை அவசியம். தம்பதிகளாகிய ஆண், பெண் இருவரும் ஒன்று கூடியே யாகத்தைப் பண்ண முடியும். புருஷன மட்டும் தனியாக அல்லது மனைவிமட்டும் தனியாக— ஒரு யாகத்தையும் பண்ணமுடியாது. சாஸ்திரஙகள இதை அனுமதிககவில்லை. அதனால் பீஷ்மருக்கு மனைவி இருந்திருகக வேணுமென்பது ஊர்ஜிதமாகிறது. பாரதம் - அனுசாஸன பர்வம் - பீஷ்மஸ்வர்காரோஹணபர்வம் (அத்யாயம் 154) பீஷ்மருடைய முடிவைக் கூறுகிறது. அதில் 12-13-14 ச்லோகங்கள்.

ततोऽस्य विधिवच्चक्रुः पितृमेधं महात्मनः।
याजका जुहुवश्चाग्निं जगुस्सामानि सामगाः॥

ततश्चन्दनकाष्ठैश्च तथा कालेयकैरपि।
कालागरुप्रभृतिभिः गन्धैश्चोच्चावचैस्तथा॥

समवच्छाद्य गाङ्गेयं प्रज्वाल्य च हुताशनम्।
अपसव्यमकुर्वन्त धृतराष्ट्रमुखा नृपाः॥

என்பனவாம. பீஷமர் தன்னிஷ்டப்படியே இறக்கும் வரம் பெற்றவர். இவருடைய தந்தையாகிய சந்தனுமகாராஜன இவருடைய மாபெரும் த்யாகத்தைக் கண்டு இவருக்கு இந்த வரமருளினார். அம்புகளாலான படுக்கையில (சரதல்பததில்) பல நாட்கள்படுத்திருந்தார் இவர் அம்மட்டோ? சிகண்டி என்பவன், ஆயுதத்தைக் கீழே போட்டுவிட்ட இவரை ஆயிரக்கணக்கான அம்புகளை எய்தித் தாக்கினான். அவ்வளவையும் எல்லைகடந்த பொறுமையுடன் இவர் ஏற்றுக்கொண்டார். ஆனால்! சாகவில்லை. உடம்பெல்லாம் கூர்மையான அம்புகள் பொத்துக் கொண்டிருந்தன. சகிக்கமுடியாத வேதனை. அவா உத்தேசித்த புண்ய காலம் வந்தது; உயிரைவிட்டார். ஒவ்வொரு உடலுறுப்புக்களிலிருந்தும் படிப்படியாக உயிர் பிரிந்தது. முடிவில் முற்றும் வெளியேறிவிட்டது. அது அற்புதமான சோதிவடிவமாய் மேலே சென்றது. மகரிஷிகள் பலரும் தர்மபுத்திரா முதலியவர்களும் இதைக்கண்கூடாகக் கண்டு வியந்தனர். மறறொரு அதிசயம், எந்தெந்த உறுப்பிலிருந்து அவரது உயிர் பிரிந்ததோ அவ்வவ்வுறுப்பில் பொத்துக் கொண்டிருந்த அம்புகள் தன்னடையே கீழே விழுந்துவிடும். உயிருள்ள உறுப்புக்களில் அப்படியே பொத்துக்கொண்டிருக்கும். இதைக் கண்டவாகள் பிரமித்துப்போயினர். முழுதும் உயிர் பிரிந்த பின் ஈமச்சடங்குகள் நடந்தன. யாகம் செய்விக்கும் ரித்விக்குகள் வந்தனர். அக்நியை வளர்த்து ஹோமங்களைப் பண்ணினர். ஸாமகானங்கள் நடந்தன. அவரது உடல் தகனம் செய்யப்பட்டது.

இதில் ஒரு விசேஷம் கவனத்திற்குரியதாம். யாகம் செய்பவர்கள் இறந்துபோனால் அவர்களை தகனம் செய்யும முறை வேறு; சாதாரண மானவாகள் இறநதுபோனால அவர்களைத் தகனம செயயும் முறைவேறு. த்ரேதாகனிகள் என வழங்கும் மூனறு தீக்களினால யாகம் செய்தவர்களின் உடல் தகனம் செயயப்படும். தகனம் செயயுமமுன யாகம் செய்விக்கும் ரித்விக்குகள் வந்து ''அந்த்யேஷ்டி'' எனபபடும் ஒரு யாகத்தை செய்து அக்னிகளை வளர்க்க வேணும். இப்படியெலலாம் பீஷ்மருக்கு தகனகரியை நடநததாக ஷை சலோகங்கள் கூறுகின்றன. அதனாலும பீஷ்மர் மனைவியுடன் முத்தி வளர்தது யாகம் பண்ணினவர் என்பது அறியப்படுகினறது.

இனி ஒரு கேள்வி எழுகின்றது; பரம தார்மிகரான பீஷமருக்கு ஸஹதர்மசாரிணியாக ஒரு மனைவி இருந்திருக்க வேண்டும் என்றால், அவள் பெயர், ஊர், குலம், கோத்திரம், இவைகள் என்ன? பிரம்மாண்டமான மகாபாரதத்தில் எந்தஇடத்திலாவது இவை கூறப்பட்டுள்ளனவா? அந்த உத்தமியும் பீஷ்மரைப் போலவே சிற்றின்ப சுகத்தை அறவே மறந்து, யாகம் முதலிய தர்மகார்யங்களில் தன் கணவனுக்குத் துணைவியாக இருந்து புண்ணியம் சேமிப்பதிலேயே ஆர்வங்கொண்ட வைராக்கியசாலினியாக இருந்திருக்கவேண்டுமே! பீஷ்மருக்குத்தான் பிதாவை த்ருப்தி செய்விப்பதற்காக அந்த அவசியம் ஏற்பட்டது. அவளுக்கு அஃதில்லையே. திருமணம செய்து கொள்ளும்போது மணமகனும் மணமகளும் ஒரு மனதாக ஸங்கல்பம் செய்துகொண்டு தான் மற்ற சடங்குகளை நடத்துவார்கள். 'धर्मप्रजार्थम्'. என்பதுதான் அந்த ஸங்கல்பம். ''தர்மங்களைப் பண்ணுவதற்காகவும் புத்திரஸந்தானத்திற்காகவும் நாமிருவரும் தம்பதிகளாவோம்'' என்பது கருத்து. இப்படி ஸங்கல்பித்துக் கொண்டு, இதற்கு மாறாக நடத்துகொள்வது அதர்மமில்லையா? பீஷ்மருக்கு இதெல்லாம் தெரியாதா? இப்படிபபட்ட தர்மசங்கடமான சூழ்நிலையில் சிக்கித்தவித்தவர் மற்றும் யாரேனுமுண்டா? பீஷ்மர் பிரம்மசாரியா? கருஹஸ்தாரா? இது போன்ற பிரச்னைகள் பலவும் கிளாநதெழும். இவற்றைப் பிறிதொரு கட்டுரையில் காண்போம்.

## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதறகு மேற்பட்ட காலத்திறகு அனுப்பபபடும சந்தா தொகை மட்டுமே ஏறறுககொள்ளப்படும். ஒரு வருடத்திறகும் குறைவான கால அளவுக்காக அனுப்பப்படும் சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

# வைணவ வினு - விடை

விதவான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**ஜைன மதத்தின் சுருக்கம் என்ன?**

இதற்கு 'ஆர்ஹதம்' எனவும் பெயர். இதனை வெளியிட்டவர் 'ஜினேசுவரர்'. இவருக்கு 'அர்ஹதேவர்' எனப் பெயர். வர்த்தமான மகாவீரர் எனவும் இவரை அழைப்பர் இவர்கள் தனியாக ஒரு கடவுள் தத்துவத்தை ஏற்பதில்லை. ஜீவான்கள் கோடிக்கணக்கானவர்கள். உடலுக்கு ஒத்து ஆத்மா இருக்கும். யானையின் ஆத்மா யானை வடிவானது. கொசுவின் ஆத்மா கொசு போன்றது. ஆன்மா உடம்புடன் வளரும் தன்மை உடையது. கர்மாவுக்குத் தக்கபடி, சிறியதாகவும் ஆகும். அழுக்குடம்புடன், தலையில் சிகையை நீக்கி பிச்சை எடுத்து உண்டு, வைராக்கியத்துடன் இருந்து ஆத்மாவையே நினைத்திருந்தால் மோக்ஷம் கிடைக்கும். சரீரம் போனதும் ஆன்மா உயர்வதுமே, இவர்களுக்கு மோக்ஷமாகும். இவர்களின் கொள்கையில் ஜீவன்–அஜீவன் என இரு தத்துவங்கள் உண்டு. ஜீவர்களோ முக்தர்கள் சம்ஸாரிகள் என இருவகை. ஜினேசுவரர் தான் ஆதி முக்தராவார். ஒரு ஜீவன் மோக்ஷம் அடைந்தால் அவனே கடவுள். ஜீவன் ஞானவடிவன். அழிவில்லாதவன். வினைக்குத்தக்கபடி பிறவி எடுப்பவன். பிறப்பு இறப்பு என்பது எல்லை கடந்தது. அஜீவ் தத்துவம் அறிவற்றது. அது ''தர்மம், அதர்மம், ஆகாசம், புத்கலம், காலம்'' என ஐவகை கொண்டது இதில் காலம் என்ற தத்துவத்தை நீக்கி ஜீவன் என்பதைச் சேர்த்து அதற்கு ''பஞ்ச அஸ்திகாயம்'' என்கிருர்கள். இந்த மதத்தில லோகம் என்றும் அலோகம் என்ற இரு இடங்கள் உண்டு. லோகம் என்பது 14 பாகங்கள் கொண்டு, ஊர்த்வம்-அத:-திரியக்- என மூன்ருய் இருக்கும். லோகம்என்பதுதேவர்,மனிதர், விலங்கு, பறவை முதலிய உயிரினங்கள் தங்கத் தகுதியுள்ளது. அலோகம் என்பது உலகத்திற்கு வெளியில் உள்ள கேவலம் ஆகாசவடிவான இடமாகும். முக்தன் அடைவது இந்த இடத்தைத்தான். முக்தனுக்கு மறு பிறப்பே கிடையாது. அலோகத்தில் முக்தன் அர்ஹரின் தேகத்தையோ, அல்லது அதை ஒத்த வேறு தேகத்தையோ எடுத்து அங்குள்ள பேரின்பங்களை அனுபவிப்பன்.

விரதம் என்ருல் இவர்களின் கொள்கைப் படிக்கு ஜீவஹிம்ஸையை மனதினுல் கூட நினையாமல் இருந்து, பிறர் பொருளை அவர்களின் அனுமதியின்றிக்கவர்தல், பொய் சொல்லுதல், உடல் புணர்ச்சி விட்டிருத்தல் என்பதுடன், முக்கரணங்களிலும், காமம், கோபம், பேராசை, மோஹம், பொருமை, மதம் என்பன இல்லாமல் இருந்து, என்றும் தன் ஆன்ம நலனையே கருதி இருத்தலாகும். இம்மதத்தின் அடிப்படைப் பெரும் தத்துவம் ஜீவ இம்ஸை புரியாதிருத்தல் என்பது. அஹிம்சையினுல் வைராக்கியம் வளரும், வைராக்யத்தால் வினைப்பயன் ஜீவனில் ஒட்டுவதில்லை. உண்டி சுருங்குதலே தவமாகும். மது, மாமிசம், பால், வெண்ணை முதலிய சத்துப்பொருளை உண்ணுமல், காய், கனிகளை கிழங்குகளையே உண்ண வேண்டும். துஷ்டர்களின் உறவும், பேச்சும் அறவே கூடாது. புண்ணிய கர்மாக்கள் சுவர்க்கம் முதலிய செல்வத்தைத் தரும். பாபங்கள் பல துன்பங்களைத் தரும். இவர்கள் உலகை ''க்ஷணிகம்'' என்பர்: இதைக் கொண்டு ''ஸப்த பங்கி'' என்பதைக் காட்டுவார். விவரமாக அறிய விரும்பினுல் இவர்களின் மத நூல்களான. ஜைன சூத்ரம், ஜைன தத்துவ தீபம் முதலியவற்றில் காணலாம்.

**பௌத்த சமயம் பற்றிய சிறு விளக்கம் என்ன?**

நாராயணன் புத்தராக அவதாரம் எடுத்தார் என்பது நம் முன்னேர்களின் கொள்கை, அவரும் பௌத்த சமயத்தைப் பரப்பிய கபிலவஸ்துவில் தோன்றிய சித்தார்த்தரும் ஒருவர் எனவும் இல்லை எனவும் இரு கருத்துக்கள் உண்டு. இவரது கொள்கைகளில் சில —இவ்வுலகம் அநித்யம், அத்துடன் துக்கமயமானது. ஆன்மா, ஈசுவரன் என்ற தனித் தத்துவங்கள் இல்லை. அறிவுடன் கூடிய இந்த உடலே ஆத்மா (இதைத் தான் ''சரீராத்மவாதம்'' என்பர்) ஆசைதான் எல்லாத் தீமைகளுக்கும் அடிப்படைக் காரணம் துன்பமே வடிவான பிறப்பு இறப்புக்கும் காரணம் ஆசையே. ஆசை என்பது அறியாமையால் ஏற்படுவது. மலம் எனபது ஆசை, பகைமை, அறியாமை என்பதாகும் இம்மலங்கள் போய், அகம் காரம், மமகாரம் நீங்கி, உயிரனைத்திலும் இரக்கமும் அன்பும காட்டி இருப்பது தான் 'நிர்வாணம்' என்பது. நிர்வாணம் என்பதற்கு முக்தி என நிகண்டுப் பொதுப் பொருள். புத்தரால் வரப்பப்பட்டதைக் கொண்டு இதனைப் புத்தசமயம் பௌத்தம் என்பர். இந்த மதம் தற்சமயம், சீனு, ஜப்பான், ஸ்ரீலங்கா, பர்மா முதலிய நாடுகளில் அதிகம் பரவியுள்ளதாயினும் இம்மதத்தின் பிறப்பிடம் நம் பாரதமே. இவர்கள் நான்கு பிரிவுள்ளவர்கள்.

வைபாஷிகர், ஸௌத்ராந்திகர், யோகாசாரர், மாத்யமிகர் என்பவையே அவை. இவர்களுக்கு சமயப் பொதுக் கொள்கை உண்டு இவர்களில்,

வைபாஷிகர் என்பவர்கள் "கடவுள் கிடையாது. ஜீவாத்மாவும் கிடையாது. உலகம் பல சிறு பொருள்களின் ஒருமித்த கூட்டம். கணம் தோறும் கண்ணில் பட்டு மறைவது உலகம். அது அதன் இயல்பு. உடம்பில் தோன்றும் ஞானம்தான் ஆத்மா. அதுவும் தோன்றி மறையும் இயல்புள்ளது. இந்த உண்மையை அறிந்தால் மோக்ஷம்" என்பர்.

ஸௌத்ராந்திகர்; இவர்கள் வைபாஷிகளின் கொள்கைகளுடன் சில அதிகக் கொள்கை கொண்டவர்கள். இந்த உலகையும் அதன் தன்மையையும் அனுமானத்தால் அறியலாம் உலகம் நிலை என்று நினைப்பதே பிறவிக்குக் காரணம் என்பன போன்ற சில கருத்துக்களைக் கூறுவார்கள்.

யோகாசாரர் என்பவர் கடவுள், ஆத்மா என்பன இல்லை ஞானம் தான் உண்டு. அது க்ஷணிகம். அந்த க்ஷணிக ஞானம் யானை, மனிதன். பூனை முதலியவைகளை நினைத்தால் அவைகளாகின்றன. "ப்ரமரகீட" நயாயத்தை இதற்கு ஒருவாறு ஒப்பிடலாம் எனகிறார்கள். மற்றப்பகுதிகளில் பெரும்பாலான பொது பௌத்த சமயக் கொள்கையை ஏற்பார்கள்;

மாத்யமிகா என்பவர்கள் இவர்களும் பௌத்த மதத்தின் பொதுக்கொள்கைகளை ஏற்கிறார்கள். உலகில் காண்பதெல்லாம் பொய். கடவுள், ஜீவன், உலகம், அறிவும், அறிகிறவனும், அறியத்தக்க வஸ்துக்களும், ஒன்றுமே இல்லை. தோன்றுகிறதே என்றால் அது ப்ரமம அதாவது மயக்குறுதலாகும். இவைகளை உண்மை என நினைப்பதும், பொய் என நினைப்பதும், பிறப்புக்கும் மோக்ஷத்துக்கும் காரணம் எனகிறார். "சூன்யம்" என்றால் ஒன்றுமில்லை எனப்பொருள். ஆதலால் ஒன்றுமில்லை எனக் கூறுமவர்கள் சர்வ சூன்யவாதிகள் ஆகுகிறார்கள்.

(தொடரும்)

---

(20-ம பக்கத் தொடர்ச்சி)

"தேவஸ்யாக்ரே விசேஷேண ந்ருத்தம் குர்யாத் ஸகேயகம்" என்றவாறு 'ஸகேயகம' என்று குறிப்பிடப்படுவதால் இசைக்கும இது இனிது பொருந்தும். உத்ஸவம், யாகம், ஹோமம் ஆகியவற்றை நடத்தும் கர்த்தாவிற்கு சில நியமங்கள் உண்டு. இரவில் அவன் தூங்கக் கூடாது என்பது ஒரு நியமம். யாக சாலையில் ஏற்பட்ட களைப்பால் உறக்கம் வரலாம். அவ்விதம் தூங்காமல் இரவுகளைக் கழிக்க இது போன்ற இசை நிகழ்ச்சிகள் அவசியம். இதை ஸூப்ரபேத ஆகமம,

" ந்ருத்தகேய ஸமாயுக்தம் ராத்ரௌ
நித்ராம விவர்ஜயேத்"

என்றும, பூர்வகாரண ஆகமம,

" ந்ருத்த கேயைச்ச வாத்யைச்ச
ஸ்தோத்ரைர் மந்த்ர ஜபைஸ்தததா।
ராத்ரி சேஷம் வ்யபோஹ்யாத
பரபாதே விமலே குரு ‖

என்றும் மேற்கண்ட விவரங்களை விளக்குகின்றன.

'ப்ரச்ன ஸம்ஹிதை' என்ற கிரந்தத்தில் அநதந்த வாத்யங்களை அதன தன் திசையில் வைத்து பூஜித்த பிறகு வித்வான்களுக்கு பட்டு வஸ்த்ரம் போன்றவைகளை வெகுமதியாகக் கொடுத்து பின்னர் அந்தந்த வாதயங்களை வாசிக்கச் சொல்ல வேண்டும் என்ற விவரம் காணப்படுகிறது.

" வாருண்யாம சர்ம வாத்யானி ஸௌம்யே காம்ஸ்யம் து வின்யஸேத்
பிதாய நவ வஸ்த்ரேண ப்ரோக்ஷ்ய புண்யாஹ வாரிணா"

என்ற சுலோகம் இதனை விளக்கும்.

இந்த இசை, ந்ருத்யம் போன்றவற்றை செய்வதால் என்ன பயன் என்பதை ஸூப்ரபேதம் என்னும் ஆகமம் மேலும் கூறுகிறது.

" ஏவம ந்ருத்தம க்ருதம யத்ர
ஸுபிக்ஷம் லோக சாந்திகம
துர்நிமித்தானி நச்யந்தி க்ஷேத்ர
மாரோதகம் ந்ருணாம"

நாட்டில் நடமாடும் பஞ்சம், பட்டினி, சாந்தியின்மை, கலகம் முதலியவை விலகி நாடு நிம்மதியடையும என்பது இதன கருத்து. ஸத்குரு தியாக பிரம்மம,

" முத்துகா தம்பூர பெட்டி சுத்த மைன
மனஸுதோ ஸுஸ்வரமுகானு
பத்துதப்பக பலியிஞ்சே பக்தபாலனமு
! ஸேயு"

என்றவாறு கத்தனவாரிகி என்ற தோடி கீர்த்தனையில நாதோ பாஸனையில் ஈடுபட்டவர்களை பகவான் காப்பாற்றுகிறார் என்று கூறுகிறார். நாரத பகவானைப் பற்றி பாகவதத்தில் சுகாசாரியார் கூறும்போது,

ஸ்வர பரஹ்மணி நிர்பாதி ஹ்ருஷீகேச
பதாம்புஜே ।
அகண்டம் சித்த மாலேச்ய லோகான்
அனுசரன் முனி: ‖

என்கிறார். நாரத ரிஷி நாத பிரஹ்மத்தில் ஸ்ரீபகவான் ஹ்ருஷீகேசனின் சரணாரவிந்தங்களைக் காண்கிறார். நாத பிரம்மத்தில் லயிப்பதன் மூலம் பகவானுடைய சரணங்களில் தம்முடைய சித்தத்தை அறுபடாமல் நிலைநிறுத்தி உலகங்களில் ஸஞ்சரித்து வருகிறார் என்பது இதன் பொருள்.

இரண்டு ஸ்வர பிரஸ்தாரங்களுக்கு இடையே முகிழ்க்கும் மௌனம்தான் மிக உயர்ந்த இசை என்று, புகழ் பெற்ற மேல் நாட்டு வயலின் மேதை யெஹூதி மெனுஹின கூறுகிறார். மௌனத்தையே இசையாக பாவிப்பது நமக்கும புதிதல்ல. மௌன குருவான பகவான் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியை நாமும பிரார்த்தித்து ஸர்வமங்களங்களையும் அடைவோம்.

" குகாரச் சாந்தகாரோ ஹி ருகாரஸ
தேஜஸ்யதே
அக்ஞான க்ராஸகம ப்ரஹம குருரே
வந ஸம்சய:"

'குகாரம' அறியாமை இருளைக் குறிப்பது 'ருகாரம்' ஞான ஒளியினைக் குறிப்பது. அக்ஞான இருட்டை நீக்கும் வெளிச்சம் போன்றவர் குருபகவான் என்பதில் ஐயமில்லை. ★

# ★ திருவேங்கடமலை வரலாற்று மாலை ★

வீரராய அரசே, இநத ராமாநுஜ முனிவர் சபையில வாதம செய்ப வரை வாயெழாமல ஸதம்பிக்கச் செய்யும வித்தையில் தேர்நதவர் போலும. ஏதோ மந்திரததைச் செபித்து எஙகளை ஊமைகளாக ஆககுகிறார. நாஙகள இபபோது அவரது வாததிறகுத தகக விடை யளிக்க வல்லமையற்றிருந்தபோதி லும, பழைய பெரியோர்கள் பரம் பரையாகச் சொல்லிவரும் (எங்கள) வாததில நமபிககை கொணட எங கள் மனம, தேவதையின் இசை வைக் காட்டினாலல்லது, இம்முனிவ ரின வாததில் நம்பிக்கையை அடையமாட்டாது. இவர் தமது வாதத்தில தேவதையின் அங்கீ காரத்தைக காட்டினாராகில் அப் போதுதான நாங்கள் இவரது வாதத்தை நம்பத்தக்கதாக இசை வோம் இல்லையேல இசையமாட் டோம் இநநாட்டிறகு அதிபதி யாய வலிமைமிக்க அரசனான நீ எதையும செய்யவல்லை நீ ராமா நுஜ முனிவரின விருப்பபபடி வலிக கட்டாயமாக நிறைவேறறுமபோது, பாக்கியமற்று வலிமையும் இலலாத நாஙகள 'ராஜா ஹரதி ஸர்வஸவம் கா தத்ர பரிதேவநா' (அரசன செல வம் அனைததையும அபஹரித்தானா கில் அதில வருந்திப் பயனென்ன?) என்னும உலக நீதியை எண்ணி ஓய்ந்து வெறுமனேயிருககப் போகி றோம்—என்று சைவா கூறவும், யாதவ ராஜன் அவர்களைத் தங்கள் குரங்குப்பிடியை விட விருமபாத மூர்க்கர்களென்று நினைத்து அவர் களைக் குறித்து இஙஙனம கூறலாயி னன.

ஓ சைவர்களே, இதுகாறும் இயனறவரையில் விடையளித்துக கொணடு வந்த நீங்கள் வேறு வழி யினறி, இராமாநுசா மநதிரம் போட்டுவிட்டதாகக் கட்டிய கதை யென்னும் சொக்குப்பொடி தூவி என்னை மயககமுயல்கிறீரகள என்று நினைக்கிறேன். இதற்கு முன்பு பிர மாணமொன்றையும தொடாமலே வெறும போலியடையாளங்களையே கொணடு, வேஙகடேசன வேறுதேவ தையென்று புதிதாகக கற்பிக்கப் பட்டதொரு வாதத்தைச் செய்து என்னை மயக்கி, இப்போது அவ் வாதத்திற்குச் சிறிதுமிடமில்லாமற் போனதனால் வேறு வழியில் என்னை ஏமாற்ற முயலும நீங்கள தகக தண டனையை அனுபவிக்கப போகிறீர் கள். ஆகவே ஜாககிரதையாக இருங்கள்—என்று சைவாகளை மிரட் டிய அவவரசன், மனிதரால் செய்ய முடியாத காரியஙகளைச செய்யவல்ல வரும் யோகியா தலைவருமான இவ் விராமநுச முனிவரெனனும் மஹா புருஷா சைவா கூறியபடியே தமது வாதத்தில் தேவதையின் இசைவுள் ளமையையும் காட்டவல்லவரே யாவர். ஆகையால் இடைப் பெண கள முதலாகப் புலவா வரையிலு முள்ள மக்களெல்லோரும நமபும வகையில் தேவதாங்கீகாரத்தைக் காட்டுமாறு இம்முனிவரை வேண்டு வோம் என்று நினைத்து அவரிடம் விநயததுடன் பேசலானான்.

வாரீர் இராமாநுசமுனிவரே, உம் மால் பிறர் மதத்தை மறுத்து உமது மதம நன்றாகவே உறுதிப்படுததப் பட்டது. இப்பெருமான் திருமா லலல, வேறு தேவதையே என்று சைவர் ஏறறியதனால் எனக்கு ஏற பட்ட ஐயமென்னும் பேய என் மனத்தைவிட்டு, இனிப்புகாதபடி உமமால் வெகு தூரததிறகப்பால ஓட்டபபட்டது. வேங்கடேசன் வேறு தேவதையென்னும் வாதம் அத்தாட்சிகட்கு அப்பாற்பட்ட தென்றும், திருமாலே அவா என் னும் வாதமே பிரமாணங்கட்கு உட் பட்டதென்றும், சாத்திரங்களையும் யுக்திகளையும் கொணடு நீர் சாதித்த தனால் நான் பலமான நமபிககையை அடைவிககப்பட்டேன். அதனால நீர் கருதியபடியே எல்லாக காரியங் களையும நிறைவேற்றி வைககிறேன. ஆனால மஹாபுருஷரும மனிதர் செயற்கரியவற்றையும செய்யவல்ல வருமாகிய நீர் பணடிதரும் பாமர ரும வாசியில்லாமல இசையும்படி, தேவதையின் இசைவைக காட்டுவ தும தருப்தியை உணடுபணணவல லதுமான ஸமாதானோபாயம் ஒன்றை நீர் செய்யவல்லீராகில் அவ விதமாகவும் செயயும்படி வேணடுகி றேன். இதனால் உமது விருப்பப் படி நிறைவேறறிவைக்கமாட்டே னென்று நினைக்க வேண்டாம. அப் படியானால், வாதம் புரியும் சைவர்

திரு தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான.
திருபபதி.

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

னர் தாங்கள் மறுக்கப்பட்டதனை மனமார இசைவர்களென்றுதான் உம்மிடம் இங்ஙனம் வேண்டுகிறேன் என்றான் (அரசன்).

இவ்வாறு வேண்டிக்கொள்ளப் பட்ட அவ்விராமாநுசமுனிவர் — இவ்வளவு விரித்துரைத்தும் திருப்தியடையாதவன்போல் தென்படுகிறான் அரசன். இது விந்தையே. ஆகையால் இப்போது இதுதான் செய்யத் தக்கது. பிரமமாண்டபுராணத்தின் பதினோராமத்தியாயத்தில் - கலியுகத்தில் விமானம் முதலியவற்றைப் போல் சங்கு சக்கரம் தொடக்கமான திவ்யாயுதங்களையும் பக்தர்கள் நிருமித்து ஸமர்ப்பித்தால் ஏற்றுக்கொள்வதாக முன்பே பகவான் பிரதிக்ஞை செய்திருப்பதாகக் காண்பதனாலும், நாம செய்து ஸமர்ப்பித்தவற்றை ஏற்றுக்கொள்ளமாட்டானென்கிற நியதி ஏதுமில்லாமையாலும், இவன் வேறு தேவதையென்று இப்போது ஏற்பட்டுள்ள பெருங்குழப்பம் நீங்குவதற்காக, நீர்ப்பந்தம செய்தாவது பகவானைப் பிரார்த்தித்துச் சங்கு சக்கரங்களைத் தாங்கும்படிச் செய்வோம். பக்தர்களிடம் கடல் போன்ற பாசம வைத்துள்ளவனும் அதனால் அவர்களுக்கு வசபட்டவனுமான பகவான் நமது வேண்டுகோளுக்கிரங்கி நாம் ஸமர்ப்பித்த சங்கு சக்கரங்களை நிச்சயமாக ஏற்றுக்கொள்வான். ஆகையால் அவற்றை இயற்றி அணிவிப்போம். அவன் அவற்றை அணிந்து கொண்டானானால், அதையே தேவதையின் இசைவைக் குறிப்பதாகவும அனைவரும் நம்பத்தக்க அத்தாட்சியாகவும் காட்டுவோம — என்று தமக்குள்ளே நினைத்துக்கொண்டு, வாராய் அரசே, மிகவும் நம்பிக்கையை உண்டுபண்ணுவதான எனது இவ்வார்த்தையை ஊக்கமாகக் கேள். நான் இப்பெருமானை விஷ்ணுவென்று கூறுகிறேன். இச் சைவர்களோவெனில் வேறு தேவதையென்று சொல்லுகிறார்கள் அல்லவா? நான விஷ்ணுவுக்கே உரிய அடையாளமாகிய சங்கு சக்கரங்கள் முதலியவற்றைச் செய்வித்துப் பெருமானருகில் வைக்கிறேன். அவர்களும் வேறு தேவதைக்கு அடையாளமாகிய பாசம் அங்குசம் தொடக்கமானவற்றை நிருமாணம் செய்வித்து அப்படியே வைப்பார்களாக. எந்த ஆயுதங்களை அப்பெருமான் எடுத்துத் தாங்குகின்றானோ அவ்வாயுதங்களை அடையாளமாகவுடைய தேவனாகவே அவனை அறுதியிடவேண்டும் என்று யாதவ மன்னனிடம் கூறினார். பின்பு அம் மன்னவனும் அதுகேட்டு மகிழ்ச்சியுற்று, அவ்வாறு செய்தால் யாருக்கும் எவ்விதமான ஆட்சேபமும் இராது. ஆகையால் அப்படியே செய்தருள்க தாங்களும் அவர்களும் என்று கூறினான். பின்பு வாதியர் இருவரும் தந்தம் தேவதையின் முக்கிய அடையாளமாகிய ஆயுதங்களைச் செய்வித்து ஒருநாள் அரசனுடன் திருமலையேறிச் சென்று இரவில் திருக்கோவிலின் கருவறையில் பெருமானுக்கருகில் அவற்றை வைத்துக் கதவைச் சாத்தித் தாளிட்டு அரச முத்திரையும இடுவித்து, விடியும வரையில் விழித்துக்கொண்டே ஊக்கமாகக் கோவிலைச் சுற்றித் திரிந்துகொண்டும் தந்தம் கொள்கை வெற்றி பெறுவதற்காகத் தந்தம் தேவதையைத் தியானித்துக்கொண்டும் இருந்தனர்.

பகவான் இராமாநுசமுனிவர் தமது யோக மகிமையினால ஸ்ரீநிவாஸபகவானை அணுகி நன்றாகத் தரிசித்து, பகவானே, நீ முன்பு செய்தருளிய பிரதிஜ்ஞையின்படி உன்னுடைய முக்கிய அடையாளமாகிய சங்கு சக்கரங்களைத் தரித்துக் கொண்டு எங்களைக் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டு அங்ஙனமே அவன் தரிக்கும்படிச் செய்தார். பிறகு காலையில் யாதவமன்னவன் அவ்வாதியர் இருவரோடும கோவிலுக்குச் சென்று கதவைத் திறந்து உள்ளே சென்று, ஸ்ரீராமாநுஜமுனிவரின் பக்தியாகிற வலைக்கு வசப்பட்டுப் பாசாங்குசங்களைத் தூரத்திலேயே இருத்திச் சங்கு சக்கரங்களையே தரித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீவேங்கடேச பகவானைச் சேவித்து வியப்பெனனும பெருங் கடலில் மூழ்கிய மனமபடைத்தவனாய் ஸ்ரீராமாநுஜமுனிவர்திறத்தில் மிகவும் கௌரவ புத்தியடையப் பெற்று அவருடைய நியமனத்தைக் கொண்டு, தன்னடையே கருவந் தொலையப் பெற்ற பொய் கூறிய சைவர்களை தவறுக்குத் தக்கவாறு தண்டித்துத் தனது நாட்டிலிருந்து வெளியேற்றிவிட்டு, தான் அம்முனிவர் ஸந்நிதியிலே பகவத்ஸமாச்ரயணம் (ஸ்ரீவைஷ்ணவ தீக்ஷை) செய்துகொண்டு தனது பிறவிப் பயனைப் பெற்று அம்முனிவருடைய திவ்யபாதாரவிந்தங்களையே தஞ்சமாக நினைத்துக்கொண்டு மனவமைதியோடு இருந்தான்.

(36-ம பக்கம் பார்க்க)

## அறிவிப்பு

திருமலையில் கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக்காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல்களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D D) மூலம் அனுப்பினால் மேலாண்மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெயரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெறாக் கொள்வதில்லை.

# இரட்சாபந்தனம்

### திருநீற்று வைபவம் :

துன்பத்திலிருந்து ஆன்மாவை இரட்சிப்பது 'இரட்சை'. இந்த இரட்சையை—திருநீறு, விபூதி, பசுமம, பசிதம, சாரம் எனறு சைவ மதத்தினர்கள் போறறுவாாகள். ஆன்மாக்களின பாவங்களையும் ஒழிப்பது இநதத் திருநீறு.

'நீறில்லா நெற்றிபாழ்' எனறு ஔவையார் கூறியிருப்பதையும பார்க்கலாம். ஒரு சமயம் பாணடிய நாட்டு முதலமைச்சராக இருந்த மாணிக்க வாசகர் 'பிணியெலாம்வரினும அஞ்சேன்' என்று தொடஙகி 'வெண்ணீறு அணிகிலாதவரைக் கணடால்' பயப்படுவேன் என்று சொல்லியுள்ளார். மதுரையை ஆண்டு வந்த கூன்பாணடியனுக்கு வெப்பு நோய் கண்ட சமயம் 'மங்கையர்க்கரசி' என்பார் ஆலவாய் அழகன் திருக்கோவிலிலிருந்து திருநீறு கொண்டு வந்து அரசனது உடம்பில் பூசச் செய்ய வெப்பு நோயும் தீர்ந்தது. எனவே பண்டைக் காலந்தொட்டு, அடையாளமாக சைவ மதத்தினரால் திருநீறு பூசப்பட்டு வருகிறது.

சைவர்களுக்கு ஐந்து எழுத்து (நமசிவாய) உருத்திராட்சம், திருநீறு மிகவும் முக்கியம். இந்த மூன்றில் தெய்வ நலம் தருவது திருநீறு. திருநீறு, விபூதி, பசுமம் (சாம்பல்), பசிதம், சாரம், இரட்சை என்ற பல பெயர்களில் திருநீறை அழைக்கலாம். சைவர்களுக்கு இதுவே 'இரட்சாபந்தனம்'. இந்தத் திருநீறு பாவங்களைப் போக்கும், ஐசுவரியத்தைக் கொடுக்கும். பேரூர் புராணம் திருநீற்றின் வைபவத்தை விளக்கமாகச் சொல்லுகிறது. அப்பர் பெருமான் 'திருவெண்ணீறு அணியாத திருவிலாரும்' என்று தொடங்கி 'அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே' என்று சொலலுகிறார்.

அதாவது திருநீறை அனபுடன் ஏற்றுக்கொணடு பூசிககொண்டால எல்லா நோய்களும் உடலிலிருநது நீஙகுமென்றும், அவ்வாறு பூசிக் கொள்ளாவிட்டால் பிறப்பும இறப்பும வந்து உழலுவாாகள என்கிறார்.

திருநீறை தரித்துக் கொள்ளும் போது 'சிவாய நம'' எனறு சொல்லிக கொணடே கொடுக்க வேண்டும். திருநீற்றிற்கு 'பஞ்சாட்சரம்' என்ற வேறு பெயரும் உண்டு.

முதலில் திருநீறறை தண்ணீர் சேர்த்து குழைக்காமல் தலையின் உச்சி, நெறறி, மார்பு மற்றும் இரணடு தோள்களின் மேலும் கொஞ்சமாக பூசிக்கொள்ள வேணடும். பிறகு 'சிரநுதன் மார்புந்தி முரன்ற முழந்தாள் தோண முழங்கை மருவு மணிகட்டு விலா முதுகு கண்ட மெனுமிவைபீரெட்டும் விபூதியிடுக'. உடலில் பதினாறு இடங்களில் விபூதியை (திருநீறு) இட்டுக்கொள்ள வேணடும்.

பெரு விரல், நடுவிரல், மோதிர விரல் என்ற மூன்று விரல்களினால திருநீறறை வலது கையினால் எடுத்துக் கொணடு இடது உள்ளங்கையில வைத்து அதன்மேல் ஐந்தெழுத்தான 'நமசிவாய' என்பதனை வலக்கரததால் எழுதி மூடிககொள்ள வேணடும். பிறகு பஞ்ச கலா மந்திரம், பஞ்சப் பிரம்ம மநதிரம், ஷடங்க மந்திரம் ஆகிய 16 மந்திரங்களைச் சொல்லி இருதாய நம' என்று தண்ணீர் அளவாக விட்டு 'கவசாய வௌஷடு' என்று குழைத்துக் கொண்டு திருநீறை அணிந்து கொள்ள வேண்டும்.

பஞ்ச கலா மந்திரம் :

ஓம் நிவிர்த்தி கலாயை நம:
ஓம் பிரதிஷ்டா கலாயை நம;
ஓம் வித்யா கலாயை நம:
ஓம் சாந்தி கலாயை நம:
ஓம் சாந்தியதீத கலாயை நம:

பஞ்சப பிரமம மந்திரம் :

ஓம் ஈசானாய நம:
ஓம் தத்புருஷாய நம:
ஓம் அகோராய நம:
ஓம் வாமதேவாய நம:
ஓம் சத்யோஜாதாய நம:

ஷடஙக மந்திரம் :

ஓம் ஹ்ருதயாய நம:
ஓம சிரசே நம:
ஓம் சிகாயை நம:
ஓம் கவசாய நம:
ஓம நேத்ராய நம:
ஓம் அஸ்த்ராய நம:

திருநீற்றை 1. உச்சி, 2. நெற்றி, 3. மார்பு, 4. நாபி, 5, 6. இரு முழங்கால்கள், 7, 8 இரு தோளகள், 9, 10. இரு முழங்கைகள், 11, 12. இரு மணிக்கட்டுகள், 13, 14. இரு விலாப்புறம 15. முதுகு 16. கழுத்து என்ற வரிசையின் படியாக நமது உடலின் 16 இடங்களில் பஞ்சப் பிரம்ம மந்திரததை கூறிக் கொணடே திரி புணட்ரமாக இடடுக கொள்ள வேணடும். நெறறி, மார்பு, இரணடு தோளகளில் திருநீறறை இட்டுக் கொளளும் போது 6 அங்குல நீளத்திலும, மற்ற இடங்களில் ஓர் அங்குல நீளத்திலும் இட்டுக் கொள்ள வேண்டும்.

திருஞான சம்பந்தர் தன் திருவாக்கினால் 'மநதிரமாவது நீறு' என்று

திரு. எம். எஸ் பிச்சுமணி-சென்னை

திருநீற்றுப் பதிகத்திலே மிக் அழ காகச் சொல்லி உள்ளார். அவா சொன்ன அந்த பத்துப் பாடல்களை யும் படிப்பவரது நோயும் அகலும் என்று சொல்லி உள்ளார். குமரேச சதகத்தில் பக்தியோடு 'சிவா சிவா' என்று பரிநது திருநீற்றைக் கையி லெடுக்க வேணடும் என்று வருகிறது. 'பிரகத் ஜாபாலம்' என்ற உபநிஷத் தில 'திக பஸ்ம ரஹிதம் பாலன்' என்று வருகிறது அதற்கு 'திருநீறில லாத நெற்றியில் தீ வை' என்று பொருள் வரும். ஆகவே சைவர் களாக பிறந்தவா்கள் திருநீறை கண்டிப்பாகத் தரிததுக கொள்ள வேண்டும

பூலோக காமதேனுவாக பசு விளங்குகிறது. பசுவின் உடலில் சகல தேவர்களும் வசிப்பதாக பெரி யோர்கள கூறியுள்ளார்கள்..ஆகவே அதன சாணத்திஞல் திருநீறறைச் செய்ய வேணடும். நாறும் மணங் கொணட சாணம் மற்ற நாற்றத்தை மாற்றும சக்தியைப் பெறறது. கிருமி நாசினியாகவும் பயன்படும். 'ஆன நீற்றுக கவசம' என்று நமக்கு கவசமாக திருநீறு அமைந்துள்ளது என று திருவாசகம செப்புகின்றது

ஆகவே 'திருநீறு' ஆனது சைவா களுக்கு கவசம போல் காக்கும 'இரட்சாபந்தனம'ாயிற்று.

'திருச்சிறறமபலம்'

---

(34-ம பக்கத் தொடர்ச்சி)

அதன்பிறகு திருமாலே பரம் பொருளெனபதை நிலை நாட்டும ஆசாரயராய்த் தேசமெங்கும பரவிய புகழ்பெறறவருமான அந்த பகவத ராமாநுஜமுனிவர் 'திருவேங்கடமலை யில் ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணியின தெற் குக்கரையில் திகழும தேவன திரு மகளின மணவாளனும் திருவைகுந்த நாதனுமான ஸ்ரீ மஹா விஷ்ணு வே யன்றி வேறு தேவதையல்ல, இடை யில் சில நாட்கள் பணம் புகழ் மற றும் விரும்பப்படும பொருள்கள் இவற்றில் பேராசை கொண்ட சைவர்களால் பிறரை ஏமாற்றும் தமது ஆற்றலை காட்டி அரசனை மயக்கி இப்பெருமான் வேறு தேவதை எனறு ஐயப்படுதலாகிய களஙகம உண்டாககப்பபட்டான்' என் னும இவ்வுண்மையை எல்லா நாட் டினரும அறியுமாறு பிரசித்தமாக்கி விட்டு ஸ்ரீநிவாஸப்பெருமானுககு ஸ்ரீவைகாநஸாகமம கூறிய கட்டளை யிலே மஹாஸம்ப்ரோக்ஷணம செய் வித்து முனபு போலவே நித்திய பூஜை நடக்கும்படிச் செய்தார.

மேலும் தொனறுதொட்டு உள்ள தும மிகவும் சிதைநததுமான ஸ்ரீநி வாஸனுடைய அழகிய ஆனந்த நிலயமென்னும் விமானத்தை மறு படியும் புதுப்பித்து, ஸ்ரீவைகாநஸ சாஸ்திரம் கூறியபடியே அதன் நான்கு மூலைகளிலும வராக நர ஸிமம ஸ்ரீவைகுண்டநாத விமான தேவதைகளைப பிரதிஷ்டை செய் வித்து, விஷ்ணுவின பரிவாரங்க ளான ஆதிசேஷன் சேனைமுதல்வர் கருடன த்வாரபாலகா முதலி யோரை அவ்வவர்களுககுத் தக்க இடங்களில ஸதாபித்து, ஸ்ரீநிவாஸ பகவானுடைய அளவிறநத அழி வற்ற செலவததின் செழிப்பிறகாக அவனது திருமாாபில், 'பத்மாஸனத் தில் இருக்கையை விரும்பியவளும் இரு கைகளுடையவளும் ஸ்ரீநிவாஸ னுடைய திருமார்பிலிருபபவளுமான வியூஹலக்ஷ்மியானவள கேசவனுக்கு மிகவும் பிரியமானவள' என்று வராகபுராணத்தின் ஏழாமத்தியா யத்தில் சொல்லப்பட்ட வ்யூஹ லக்ஷ்மி எனப்படும இரணடு கைகளை யுடைய ஸ்ரீதேவியை, 'தாமரை மலரை இருபபிடமாகக கொணடவ ளும இரணடு திருவடிகளையும கட் டிககொணடு நனருகப பூமியில அமர்ததிககொணடு வீற்றிருத்த லாகிய பதமாஸனததில அமர்ந திருபபவளும் அகன்ற திருக்கணகளை யுடையவளுமான திருமகளைத் தனது திருமார்பில் ஸ்ரீநிவாஸ பகவான தரித்துககொணடு விளஙகுகிறா' என்று பவிஷ்யோத்தர புராணததின 13 எண் குறித்த ஏழாமத்தியாயத்தி லுள்ள வசனத்திஞல் முனபும் இப் படி' தரித்ததாக அறிவிக்கப்பட்ட வளை, வெள்ளிக்கிழமையும் உத்தர நக்ஷத்திரமும் சேர்நத சுக்லபக்ஷத்வா தசியனறு ரத்னமாலிகையென்னும் சிறந்தயோகத்தில பொனமயமான கண்டிகையில (கழுத்தணியில்) பிர திஷ்டை செயவித்தருளிஞர்.

இஙஙனம் அந்த பகவத ராமாநுஜ முனிவர் பூமி முழுதுமுள்ள திருமால திருப்பதிகளுக்கெலலாம நடுநாயக மணியாக அமைநத திருவேங்கடத தலமானது நடுவில் அரசனை வஞ்சிப பதில ஊககங்கொணட சைவ ஜனங களால் கபடமாக ஆக்ரமிக்கப்பட டுக் குழப்பமடைவிககப்பட்டிருகக, வெகு சிரமப்பட்டு அப்பேராபத்தில் நின்றும் விடுவித்து அதை ஸ்ரீவைஷ் ணவர்களுககு உரியதாக ஆக்கி, தமது திருவடித்தாமரையிணையையே தஞ்சமாகக் கொணட தேசாதிபதி யாகிய யாதவ மன்னனை நனருகத தத்துவத்தைஉபதேசிததுத் திருத்தி, அவனைக்கொணடு ஸ்ரீநி வாஸ பகவானுக்கு அவவக காலங் களுக்கேற்றபடி நடக்க வேணடிய பூஜை வகைகளை முறைவழுவாமல் நடததிவைத்துககொணடே திரு வேங்கடமலையடிவாரமாகிய (கீழத) திருப்பதியில் சில நாட்கள வசிக்க லானா.

அனந்தார்யா தொடுத்த ஸ்ரீவேங் கடாசலேதிஹாஸமாலையில் திரு வேஙகடமுடையான் வேறு தேவதை யெனனும வாதத்திற்கு மறுப்பாகிய முனறாம கொதது முற்றும.

(தொடரும)

தொடர் கட்டுரை :



# கீதை காட்டும் நல்வழி

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்-15

பகுதி—3

वृश्च्यते इति वृक्षः — வெட்டுவதால் எதற்கு அழிவு ஏற்படுகிறதோ அது 'வருக்ஷம்' எனப்படுகிறது. அரச மரத்தையோ, ஆலமரத்தையோ கோடாரியால் வெட்டி விட முடியும். அதுபோல சம்சாரம், ஜகத், பிரபஞ்சம் எனப் பல்வாறாக அழைக்கப்படும் இந்த விருக்ஷத்தை எப்படி வெட்ட முடியும்? இதை வெட்டி வீழ்த்த ஒரு ஆயுதம் உள்ளது. அதுதான் 'பற்றின்மை' என்ற வாள் ஆகும். असङ्गशस्त्रेण दृढेन छित्वा—''பற்றின்மை எனும் வாளால் இதை உறுதியாக வெட்டி'' என்று இந்த வாக்கியம் பொருள்படுகிறது. सङ्ग என்றால் பற்று என்று பொருள். असङ्ग என்பது பற்றின்மையைக் குறிக்கிறது. பற்றுதல் நம்மிடம கூடக கூட சம்சார பந்தங்களும் கூடிககொணடே போகும். பறறுதல் குறையக் குறைய நம்மைச் சூழ்நதுள்ள தொல்லைகளும் துன்பஙகளும் பநதங்களும் குறையும். பற்று முற்றிலும் அற்று விட்டால உற்றது வீடு.

உலகப் பொருளகளில் நமக்குப் பற்றுதல் இருக்கும் வரை இந்தப் பிரபஞ்ச விருக்ஷத்தின் உண்மையான சொரூபம் நமக்குப் புலப்படவே செய்யாது. நமது இந்த ஊனக் கண்ணுக்குப் புலனாவது உண்மையில் அவ்வாறு இல்லை என்றுதான் இன்றைய நவீன அணுவிஞ்ஞானம் திரும்பததிரும்பப் புகட்டுகிறது. வெறும் கண்ணால் (எலக்ட்ரான் மைக்ராஸ்கோப போனற கருவிகளும் இதில் அடங்கும்) பிரபஞ்சத்தின் புற அமைப்பைப் பார்க்கலாமே தவிர, அதன் அடிப்படையைக் கண்டு கொள்ள முடியாது.

न रूपमस्येह तथोपलभ्यते—இங்கு இம் மரத்துக்கு வடிவம் தென்படுவதில்லை. இங்கே इह என்ற சொல் 'விசாரம் செயயும்போது' என்று பொருள்படுகிறது. 'விவேகத்துடன் விசாரம் செய்கையில், பற்றுதல் இனறி ஆராய்ந்து பாாககையில்' என்பது இதன் உட்பொருள். 'பற்றற்று' ஆராயுங்கால் இந்த ஸம்ஸார விருக்ஷத்தின் வடிவமே புலப்படுவதில்லை.

'கயிற்றினில் பாம்பு' 'கிளிஞ்சலில் வெள்ளி' 'ஆகாயத் தாமரை', 'கானல் நீர்' என்ற வார்த்தைகளை நான் உசசரிக்கையில் உங்களுக்கு என்ன தோனறுகிறது? அநத வார்த்தைகளால் குறிப்பிடப்படும் பொருள்கள் எங்கோயோ இருப்பதாக ஒரு விநாடி நேரம் எணணம் வரும். பிறகு கூடவே கொஞ்சம் நன்கு அந்த வார்த்தைகளை ஆராய்ந்து பார்த்தால் அவை உணமையில் இல்லாதவையே என்ற உணமை புலனாகும். அதுபோல பற்றுதல் மிகவும் உள்ளவனுக்கு மனைவியின் பல், கூந்தல், தோல், கண ஆகிய உடலின் பல்வேறு உறுப்புகள் இன்பத்தை அளிக்கின்றன. அவளைப் பற்றி நினைத்தாலே அவன் உள்ளத்தில் மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஆனால் வைராக்யம் நிரமபப் பெற்ற ஒருவனுக்கோ அந்த எணணம் எந்த மகிழ்ச்சியையும் ஏற்படுத்துவதில்லை. மாறாக வெறுப்பையே உண்டுபண்ணுகிறது. மனைவியிடம் பற்றுடையவன் 'குவளை மலரைப் போலக் கண் அவளுடையது' எனகிறான். ஆனால விவேகியோ அதைப் 'பீளையொழுகும் ஓட்டை' என்கிறான். முன்னவன் 'அதராமிருதம்' என்பதைப் பின்னவன் 'எசசில்' என்று ஒதுக்குகிறான். 'அழகுப் பெட்டகம்' என்று

திரு. டி. கே. நாராயணன், M SC M.Phil,
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை

பற்றுடையவன குறிப்பிடும் உடலை விவேகி மலம், மூத்திரம், மாம்ஸம், ரத்தம், சீழ், சளி நிறைந்த ஒரு தோல் பை என்று வெறுக்கிறான். உலகப் பொருள்களின வெளி அழகில் மயங்கிப் பாடிய இலக்கியவாதிகளின் கற்பனை வேறு. உள்ளதை உள்ளபடிக் கணடு உண்மையை உணர்ந்து உரைத்த உத்தமர்களான ஞானிகளின் கருத்துக்கள் வேறு. பற்றுதலுடன் பேசப்பட்டது முந்தியது. பற்றற்று பகரப்பட்டது பிந்தியது.

விவேகம், வைராக்கியத்துடன் ஆராயுங்கால் மலை எங்கே, காடு எஙகே, நதி எங்கே, கடல்

எங்கே .. .... ..ஒன்றுமே தென்படுவ தில்லை. ஆமாம், ஐந்து வயதில் நான் குழந்தையாக இருந்தேன். பதினைந்து வயதில் பாலகனாக ஆனேன், இருபத்தைந்து வயதில் வாலிபனாக வளர்நதேன், ஐம்பதில் அப்பாவாக மாறினேன், எண்பதில் கிழவனாகக் காட்சி தருகிறேன அப் படியானால் 'நான் யார'. அதுதான் சிந்தனைக்குரிய விஷயம்.

நேற்று இருந்தது இன்று இல்லை. இன்று இருப்பது நாளை இருப்ப தில்லை. இதுதான் இநதப் பிரபஞ் சத்தின் பெருமை. பற்று இருக்கும் வரை நம்மைப் பிறவி துரத்தி வரும். பற்று அற்று விட்டால் இனிப் பிறவி வராது. அத்துடன் தம்மைப் பொறுத்தமட்டில் பிர பஞ்சமும் இல்லாததாகிவிடும். வாழ்வின் இறுதியில் நம் மனத்தில் எந்த வித ஆசையும் இல்லையானால், இறைச் சிந்தனை மட்டுமே இருக்கு மானால் நமக்கு மறுபிறவி கிடை யாது. இறைவனிடம் நாம் லய மாய் விடுவோம் என்று பகவான் கீதையில் வாக்குறுதி அளிக்கிறார். அதற்குத் தேவை 'பற்றின்மை' யாகும்.

பற்றின்மை என்ற வாளால் இந்த பிரபஞ்ச விருக்ஷத்தை நன்கு திட மாக வெட்டி.. பிறகு என்ன செய்ய வேணடும்?

> தத: பதமதத்பரிகார்கிதவ்யம்
> யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூய.
> தமேவ சாத்யம் புருஷம ப்ரபத்யே
> யத.பரவிருத்தி:ப்ரஸருதா புராணீ.
> (15-4)

எப்பதம பெற்றுப் பிறப்பெடுப்ப தில்லையோ அது அப்பால் தேடத்தக் கது. எவரிடத்திருந்த பண்டைத் தொழில் பெருகி வந்துள்ளதோ அதே ஆதி புருஷனைச் சரணடைகி றேன்''.

இந்த உலகம் நல்லதா அல்லது கெட்டதா? இப்படி எவராவது உங் களிடம் ஒரு கேள்வி கேட்டால் நீங் கள் என்ன பதில் சொல்லுவீர்கள்? இந்தக் கேள்விக்கு மகாபாரதம் விடை சொல்லுகிறது. ஒரே உல கத்தை ஆராய்நது வர துரியோதன னும புறப்பட்டான. யுதிஷ்டிர னும் புறப்பட்டான். 'உலகம் முழுக்க முழுக்கத் தீமைகள் நிறைந் தது' என்ற முடிவுக்கு வந்தான் துர் யோதனன். 'உலகம நல்லதே நிறைந் தது' என்ற முடிவிற்கு வந்தார் யுதிஷ்டிரர். எது உணமை? அவர வர் மனப்பாங்கிற்கேற்ப அவரவர் உலகத்தைக் கண்டனர். நல்லதும் கெட்டதும வெளியில் இல்லை. நம் முள் இருக்கிறது. நாம் நல்லவர் களாக மாறி அமைய அமைய உலக மும் நமக்கு நல்லதாகத் தென்படும்.

'யான்-எனது' என்பதுதான சம் சாரம் என்று கூறுகிறார் ஸ்ரீ வல்லபா சார்ய மகராஜ். யான் எனது அற்று விட்டால் சம்சாரம் இல்லாத தாகிவிடுகிறது. இதைத்தான் வள் ளுவரும், 'யான் எனது என்னும் செருக்கறுப்பான வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்' என்றார்.

உலகப் பொருள்களின் பின்னர் நம் மனம் சென்று கொண்டிருக்கும வரை, உலகப் பொருள்களில் விருப்பு வெறுப்பு நமககு இருக்கும் வரை இது இனியது இது இன்னாதது. மீணடும் மீண்டும் பிறநது இறந்து நாம் இங்கே அல்லல்பட வேண்டி யிருக்கும். ஆனால் இநத பிறப் பிறப்புக்கப்பால் உள்ள இடம் ஒன்று உணடு. அங்குச் சென்ற பின் னர் நமககுத திருமப இங்கு வர வேண்டியதிருக்காது. அந்த இடத்தை அடைவதுதான் நமது இறுதி இலட்சியமாக அமைய வேண் டும். இதைத்தான் பகவான் இங்கே குறிப்பிடுகிறார். ततः पदं तत्परि-मार्गितव्यम्—பின்னர் அந்தப் பெரு நிலை நாடப்படவேண்டும். அந்த நிலை எத்தகையது?

यस्मिन्गता न निवर्तन्ति भूयः-(யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூய:) எங்கே சென்றபின் திரும்ப வரவேணடிய தில்லையோ அதுவே அந்தப் பெரு நிலை.

இந்த 'சம்சார மரம்' என்பது நமது செயல்பாட்டு முறைகளுடன் இப்பிரபஞ்ச அமைப்பு முழுவதை யுமே குறிககிறது. இது அனைத்துக் கும் ஆதிகாரணன் அந்தப் பரம் பொருள். அதுவே ஆதி புருஷன் எனறு அழைக்கப்படுகிறது. நமமில் பெரும்பாலோர் உலகப் பொருள் களை அவை எப்படிப் புறத்தோற்றத் தில் தென்படுகிறதோ அப்படியே காணகிறோம். அவைதான் அவற் றின் உண்மைத் தோற்றம் என்று நம்பி விடுகிறோம். இவற்றின் ஆதி அந்தம் மற்றும் இருப்பு பற்றிய உண்மை நமக்குத் தெரிவதில்லை.

உணமையைத் தெரியாத அவித் தையில் இந்த சம்சார விருக்ஷம் உதயமாகிறது. உண்மையை அறிநத வித்தையில் அது மறை கிறது. இதைத்தான் திருமூலர் மிக அழகாகக் கீழக்காணும் பாடலில் விளக்குகிறார்.

> மரத்தை மறைத்தது மாமதயானை
> மரத்தில மறைந்தது மாமதயானை
> பரத்தை மறைத்தது பார்முதல பூதம்
> பரத்தில் மறைந்தது பார்முதல்
> பூதமே.

பெட்ரோல் இருக்கும் வரையில் தான் கார் ஓடும. அது தீர்ந்து விட்டால் கார் ஓடாது. அதுபோல பொருள்களிடம் பற்றுதல் இருக்கும் வரைதான் இப்பிரபஞ்சம் அல்லது ஸம்ஸாரம் நம்மைப் பந்தப்படுத் தும். பற்றினமை நம்மிடம் பூரண மாகிவிட்டால் நாம் இந்தப் பிறப் பிறப்பிலிருந்து விடுபட்டு பிறப்பற்ற பெருநிலையை அடைவோம்.

வைராக்கியம் எனும் வாளால் இந்த ஸம்ஸார மரத்தை உறுதியாக வெட்டி எறியுமாறு பகவான் நம் மைக் கேட்டுக் கொள்கிறார்.

(தொடரும்)

# திருமலைத் தேவன் திருப் பதிகம்

திரு. து. சிவகுமார்-சோளிங்கபுரம்.

கோவிந்தா! கோவிந்தா! என்றே நாளும்
குமபிடுவார் உள்ளத்துள் உறைவாய் போற்றி!
நாவிற்குள் நடமாடும் சொல்லே! எங்கள்
நாயகனே, நல்மருந்தே, நலமே போற்றி!
ஆவினுறை பாலுக்கு வெண்மை வைத்து
அப்பாலில பலப்பலவாம் தன்மை தந்து
காவினுறை உயிர்கட்கும் கருணை காட்டும்
கோவிந்தா நின்பாதம என்றும் காப்பு!

அரும்பிறப்பில் எவ்வுயிர்க்கும பொதுமை வைத்து
அப்பிறப்பை அறுக்கின்ற அய்யா போற்றி!
கருப்பையில் உருவாகும் உயிர்கட் கெல்லாம்
காலத்தால் கருணைதரும் கடலே போற்றி!
உருவாகி வளர்கின்ற போது, செலவா
உணவாகத் தாய்ப்பாலைப் பொழிவாய போற்றி!
திருவருளே திருமாலே போற்றி! போற்றி!
திருமலையில் நினறருளும் தேவா போற்றி!

வீசிவரும் காறறினிலே மென்மை வைத்து
வாசமதை மலருக்குள மறைத்து வைத்து
நாசிவரும காற்றுக்கு இயக்கம வைத்து
நலமான செல்வங்கள் நிறைவாய் வைத்து
நேசமிகும் எணணத்தை நெஞ்சில் வைத்து
நினைவோங்க இவையாவும் எணண வைத்து
பாசமிகும் அன்னையென பரிவு காட்டும்
பரம்பொருளே! திருமலையின் தேவா! போற்றி!

கூடிவரும் அடியவாகள் கோடி கோடி
கூட்டத்தை அனுதினமும் கூட வைத்து
தேடியவர் நெஞ்சத்தின் குறைகள் யாவும்
துடைத்தெறியும் பெருமாளே போறறி! போறறி!
வாடியவர் வருந்தியவர் பிழைகள் யாவும்
வழித்தொழிக்கும் விழித்துணையே போற்றி! போற்றி!
பாடிவரும் அடியவரின் பாட்டி லெல்லாம
பண்ணுறைய் திருமலையின் தேவா போற்றி!

எரிகினற கறபூரச் சுடரே! எங்கள
எணணத்தின தீவினைகள் எரிந்து போக
வரிக்கின்றய விழிசுடரை, வளமை ஓஙக
வளாகசினறய் காககின்றய எம்மை நாளும்
இருள் நீககி ஒளிபாயசசி இதயந் தனனில
இருநிலையை அறுக்கின்ற கருணை தன்னை
அருளகினறய் அரவணைப்பாய் அய்யா போற்றி!
அருட்கொடையே திருமலையின் தேவா போற்றி!

நின்றெமக்கு அருள்புரியும் நிமலா, போற்றி!
நீளுலகின் இயக்கததைக் காப்பாய் போற்றி!
இனறெங்கள் இதயத்தின பேத மெல்லாம்
இல்லாது அழிந்திடவே அருள்வாய் போற்றி!

என்றென்றும் எல்லோரும் ஒன்றே என்னும்
எண்ணமதே நின்றேங்க வேணடு மய்யா!
நின்பாத மலரதனை நாடி நின்றேம்
நெடுமாலே திருமலையின் தேவா போற்றி!

நீருக்கும நிலத்துக்கும் நெஞ்சம் ஏங்க
நின்கருணை நினைவுக்கு எங்கே நேரம்?
பாருக்குள் அலைமோதும் எஙகள் நெஞ்சம்
பயனற்றுப் பொருளற்றுப போன தந்தோ!
நேருமொரு துன்பததை நினைநது நின்றன்
நிறைவான கருணைக்கு வாசல் வநது
சேருகின்றேம் கோவிநதா கரங்கள் கூப்பி;
சேர்த்தருள்வீர் திருமலையின் தேவா போற்றி!

கடல்போன்று ஆசையதை வளர்த்துக் கொண்டு
கடுகளவும் நலம்நாடா நெஞ்சம் கொண்டு
உடல்போகும் என்றறிந்தும் உள்ளம் காக்க
உயர்வான நெறியதனைப் பற்ற வில்லை
இடர்வநது எமைவாட்டும் போது மட்டும்
இறைவாநின் பாதங்கள் எணணி வந்தோம்
சுடர்மணியே இதயத்தைச் சுத்த மாக்க
சுற்றிவந்தோம் திருமலையின் தேவா போற்றி!

எல்லையிலா நின்பார்வைக் கருணைக் குள்ளே
எல்லோரும் ஒன்றென்னும் நெறியை வைத்து
நில்லாது அருட்கொடையால் அனைத்தும் தந்து
நிலையாத அனைவரையும் துய்க்க வைத்து
சொல்லாது செய்கின்ற தன்மை காட்டி
சுவைகூட்டி எம்முள்ளே நின்று நாளும்
இல்லாத இடமில்லை இறைவா, எங்கள்
இதயமுறை திருமலையின் தேவா போற்றி!

விளைகினற போதங்கு வேறு சிலவும்
விளைகின்ற நிலையுண்டு கண்டு, நாங்கள்
களைநீக்கி காக்கின்றேம பயிர்கள் தம்மை,
கருணைமிகு நின்கொடையாம அறிவி னாலே!
விளைவதுவும் விளைப்பதுவும் வளமாய் நின்றல்
வளர்வதுவும் வருவதுவும் வளமாயக் கூடும்;
தளைகளினை அறுததெனறும் தயவாய்க காக்கும
திருவருளே திருமலையின் தேவா போறறி!

எததனையோ பிழைகளினைச் செய்தோம் நாஙகள்,
எதிர்வந்து மனனிக்க வேணடி, நாளும
சித்தத்தில் தெளிவின்றி வாழு கின்றேம்
சிறியோரின் சித்தத்தில் செம்மை சேர
நித்தமநின் திருபபெயரை யெண்ணி நாங்கள்
நீள்கருணை வேண்டுகிறேம் துன்பம நீங்க;
சித்தத்தில் வைத்துனைப் போற்று கினறேம்
சீாசுரக்கும் திருமலையின் தேவா போற்றி!

# ஸ்ரீ வெங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள மற்றும செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை
(அமநத்ரணோற்சவ கிருஹஸ்தாகள் மற்றும ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,
(அமந்த்ரணோற்சவ கிருஹஸதர்கள் மற்றும் ரூ. 100/- டிககெட் வாஙகிய நபர்கள் மட்டுமே அனுமதிககபபடுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை ; சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்)

**புதன கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸதர்கள் மற்றும் ரூ. 100/- டிககெட் வாங்கிய நபர்கள் மடடுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல 5-30 வரை : முதல அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமேஅனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திறகான ஏற்பாடுகள்;

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி;

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோறசவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன,

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**

10-00 முதல 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருபபாவாடை, நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நித்ய கடடளை கைங் கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்;

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமாலா சேவை, ஆர்ச்சனை 2-வதுமணி, பலி, சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு 7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு 10-00 வரை : **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங் கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன;

8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**

நடு இரவு 12-00 முதல் 12-30 வரை : சுத்தி,

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை

# மார்கழி நோன்பு

"மாதங்களுள் நான் மார்கழி" என்றான் கீதாசார்யனான பெருமாள். எனவே மார்கழிக்கு மகிமை அதிகம்.

"மார்கழித்திங்கள் மதி நிறைந்த
நன்னாளால்
நீராடப் போதுவீர்! போது மினோ
நேரிழையீர்"

மார்கழி மாதம் முழுவதும் சிறப்பாகத் திருவாதிரை நாளிலும் அதி



காலையில் நீராடி தெய்வீகப் பாவைக்குறித்து நோற்கப்பட்ட பாவை நோன்பே சேர, சோழ, பாண்டிய நாடுகளாம் மூவேந்த நாடுகளிட்ட நம் தமிழ்நாடு முழுவதும் நோற்கப்பட்ட நோன்புகளில் முதன்மையானது.

"நெய்யுண்ணோம் பாலுண்ணோம்
நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம்—மலரிட்டு நாம்
முடியோம்"
(திருப்பாவை-2)

என்றபடி அதிகாலையில் எழுந்து நீராடி நெய், பால் இவை ஒன்றுமில்லாமல் சிறிது மிளகு கலந்த அன்னத்தைப் பொங்கி நிவேதனம் செய்து மிதமாக உண்டு அலங்காரங்கள் செய்துகொள்ளாமல் நோன்பு நோற்பார்கள்.

இவ்விரதம் பூர்த்தி யடைந்ததும்,

"வான் பெயல் நனைத்த புறத்த
நோன்பியர்
தையூண் இருக்கையின்"

என நற்றிணையெனும் சங்க நூலில் கூறியபடி மகரமாதம் (சூர்யாயனப் படி) தை மாதம் முதல் இரண்டு தினங்களும் விசேஷ ஆடை அணிகள் அணிந்து நெய், பால் இவை அதிகமாகச் சேர்த்து உண்டு களித்தார்கள். மார்கழி மாதம் திருவாதிரைக்குப் பத்து தினங்கள் முன் தொடங்கி திருவாதிரையில் முடிவு பெற்றது மணிவாசகப்பெருமான் திருவெம்பாவையில் குறிப்பிடும் மார்கழி நீராடல். சந்திரனை வைத்து மாதங்களைக் கணக்கிட்டு வந்த காலத்தில் மார்கழி நீராட்டம் "தைந் நீராடல்" என்று சொல்லப்பட்டது.

"போற்றி யாம் உய்ய ஆட்
கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றி யாம் மார்கழி நீராடேலோ
ரெம்பாவாய்"
திருவெம்பாவை—20

என்று சிறப்பித்துக் கூறியிருக்கிறார். மார்கழி நீராடல் ஆண்டாள் காலத்திலோ மாணிக்கவாசகர் காலத்திலோ ஏற்பட்டதல்ல. ஆண்டாள்

"மார்கழி நீராடுவான் மேலையார்
செய்வனகள்
வேண்டுவன கேட்டியேல்"

என்று சொல்லியிருப்பதால் பூர்விக பரம்பரையாக இந் நோன்பு அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறது. மேலும் மாணிக்க வாசகர் பற்றிய திருவாதவூரர் புராணத்திலும் அவர் காலத்திற்கு முன்பே இந் நோன்பு இருந்ததாகக் கூறப்படுகிறது.

இனி பாவை நோன்பின் காரணத்தை ஆராய்வோம். பாவை என்ற சொல்லுக்குப் ப்ரதிமை என்றும்

திரு. பி. சுந்தரராமன்,
எம்.ஏ., பி.எட்.,
பழமார்னேரி.

பெண் என்றும் பொருள்படும். ஈர மண்ணினால் பாவை பிடித்துவைத்து அதற்கு மலர் சூட்டி வழிபடுவது மகளிர் வழக்கம். இச் செய்தி புறநானூற்றிலும் கூறப்பட்டுள்ளது. இப் பாவையை உமா தேவியின் அம்சமான காத்யாயினி தேவி என்றும் கூறுவதுண்டு. இச்செய்தி பாகவதத்திலும் உள்ளது.

கோகுலத்துப் பெண்கள் இவ்வாறு பாவை நோன்பு நோற்று வந்தார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவான் அவர்களை அனுக்ரஹித்தார். திருப்பாவையும், திருவெம்பாவையும் மழை வேண்டியும், நல்ல கணவரை விரும்பியும் நோன்பு நோற்கும் பெண்களை நமக்குக் காட்டுகின்றன. நாங்கள் வாழ வேண்டும்—நானிலம் வாழ வேண்டும் என்பது கன்னிப் பெண்களின் வேண்டுகோள்.

பண்டைக்காலந் தொட்டு மக்கள் மார்கழியில் நீராடி நோற்கும் நோன்பு அம்பாளின் நோன்பேயாதல்
(திருப்புக)

# 1984-இல் உங்கள் இராசி பொதுநிலை

## மேஷம்

(அசுவனி 4, பரணி 4, கிருத்திகை முதல் பாதம் வரை)

இந்த ராசி நேயர்களுக்கு வாழ்க்கையில் கௌரவ பதவிகள் தானாக தேடி வருவதும் தெய்வ தீர்த்த தரிசனங்கள், பூர்விக சொத்து இலாபங்களும் குடும்ப சுப காரியங்கள், பூமி, தன, வாகன இலாபங்கள் உண்டாகும். உத்யோகஸ்தர்களுக்கு: உயர்ந்த பதவிகள் எதிர்பாராத தன இலாபங்களும் மன சந்தோஷங்கள், தடைப்பட்ட காரியங்கள் அனுகூலம் ஆகுதல். வியாபாரிகளுக்கு: புதுவித வியாபாரங்களில் அனுகூலங்கள் காண்பதும் இயந்திர வியாபாரத்தில் முதன்மை வகிப்பதும் அதனால் இலாபத்தையும் அடைவர். கலைஞர்களுக்கு: வெளிநாடு செல்லும் யோகமும் தன இலாபங்களும் பரிசுகளைப் பெறுவதும் புதுவிதமான கலை ஆராய்ச்சிகளில் வெற்றிகளும் உண்டாகும். மங்கையர்களுக்கு: தடைப்பட்ட திருமணங்கள் நடைபெறுவதும் மண வாழ்க்கை இன்பமாகவும் அமையும். புது விதமான ஆபரணங்கள் சேர்க்கையும் ஏற்படும். மாணவ மாணவிகளுக்கு: கல்வித் திறமைகள் அதிகமாகுதலும் உதவிப்பணம் (ஸ்காலர்ஷிப்) கிடைப்பதும் தேர்வுகளில் முதலிடம் வகிப்பதும் உண்டாகும். ஆசிரியர்களுக்கு: விசேஷ அனுகூலங்களும் உயர்வுகளும் பரிசுகள், பட்டங்கள் பெறுவதும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு: வழக்குகளில் முழு வெற்றிகள் உண்டாகும். விவசாயிக்கு வாழ்க்கையின எதிர்ப்புகள் முன்னேற்றத் தடைகள் மன வியாகூலங்கள் தன விரயங்கள், பெண்களால் வீண் பழிகளும் உண்டாகும். பரிகாரம்: சிகப்பு கலர் ஆடைகள் பவழக்கல் ஆபரணங்கள் அணிவது "ஷண்முக கவச" பாராயணம் செய்வதும் நலன் தரும். திரைப்பட முதலாளிகளுக்கு உயர்வுகள். சிகப்பு நிறக் கற்களாலான ஆபரணங்கள் மிளகாய் கலர் ஆடைகள் அணிவது நலன் தரும். 2,3,7,9,11,12,18,20, தேதிகள் அனுகூலத்தைத் தரும் தேதிகள். கிழக்கு திசை பிரயாணங்களால் அனுகூலங்கள். ஆகஸ்ட்டு, பிப்ரவரி, மார்ச்சு, ஜூலை, செப்டம்பர், நவம்பர், டிசம்பர் மாதங்கள் யோகம் தரும்மாதங்களாகும். தடைகளுக்கு மங்கள வார விரதம், "ஷண்முக கவசம்" பாராயணத்தால் நன்மை உண்டாகும்.

## ரிஷபம்

(கிருத்திகை மிகுதி 3, ரோகிணி 4, மிருகசிர்ஷம் 2-ம் பாதம் வரை)

இந்த ராசி நேயர்களுக்கு முயற்சிகள் கை கூடும் போது பால் பொங்கும் சமயத்தில் பானை உடைந்தது போல் தோல்விகள் உண்டாகும், வீடு, மனைகள்வாங்கி அதில் பெருத்த கவலைகளும் மனச்சிக்கல்களும், குடும்பத்தில் கலக்கங்களும் மனைவி புருஷனுடைய அன்பை இழப்பதும் உண்டாகும். உத்யோகஸ்தர்களுக்கு: தடைகள் ஏற்படுவதும் சிரமத்தின் பேரில் பதவிகள் பெறுவதும் இடம் மாற்றங்கள் ஏற்படுவதும் பெரிய உத்யோகஸ்தர்களின் ஆதரவுகளைப் பெறுவதும் உண்டாகும். வியாபாரிகளுக்கு: கூட்டு சேர்ந்து இடையில் நண்பர்களால் பிளவுகள் ஏற்படுதலும் மனச் சஞ்சலங்கள் அடைவதும் உண்டாகும். கலைஞர்களுக்கு: கலைகளில் உயர்வுகளும் புதிய கலைகளில் வெற்றி வாய்ப்புகளும் உண்டாகும். ஆராய்ச்சியாளர்களுக்கு: உயர்ந்த பதவிகளும் உண்டாகும்.

திரு. ஏ. ராகவய்யா ஜோசியர்.
திருவள்ளூர்.

---

வேண்டும். திருமாலை வழிபடுவோரும் சிவபெருமானை வழிபடுவோரும் ஆக இருதிறத்தினரும் பாவை பாடல் மூலமாகவே தம்தம் வழிபாட்டுக் கடவுளின் அருளைப் பேணுகின்றனர்.

திருவாதிரைப் பூர்ணமியைக் கொண்ட மார்கழியில் செய்யப்படும் நீராடல் தைத் நீராடல் எனப் பரிபாடலிலும், அதையொட்டி நற்றிணை, கலித்தொகை போன்ற மற்ற சங்க நூல்களிலும் "தைந் நீராடல்" எனும் சொல்லும் குறிக்கப்பட்டுள்ளது.

"வையெயிற்றவர் நாபபண்வகை
யணிப் பொலிந்து
நீ தையில் நீராடிய தவந்தலைப்
படுவாயோ"

கலித்தொகை—39

"இழையணி ஆய மொடுதகு நாண்
தடை இத்
தைத் திங்கள் தண்கயம் போலப்
பலர் படிந்துபடியும்"

நற்றிணை—80

என்பவை இதை உணர்த்த வந்தன

தேவர்களுக்கு உத்தராயணம் பகல், தக்ஷிணாயணம் இரவு. தேவர்களுக்கு தக்ஷிணாயணத்தின் கடைசி மாதமான மார்கழி மாதம் உஷத்காலமாகும். ஆகையால் அந்த மாதத்தில் உஷத்கால பூஜை செய்யப்பட்டு வருகிறது. இந்த இன்ப மார்கழி மாதத்தில் ஒவ்வொரு நாளும் அதிகாலையில் எழுந்து நீராடி நந்த கோபன் மதலையான எம்பெருமான் கோவிந்தனின் சீரடிகளைப் போற்றிப் பணிவோமாகுக. ★

விவசாயிகளுக்கு: விவசாயத்தில்புதிய இலாபத்தை அடைவர், மங்கை யர்களுக்கு: காதல் திருமணத்தில் முதியோர்களால் தடைகள் ஏற்பட்டு பின்பு பதிவுத் திருமணங்கள் நடை பெறும் அளவிற்கு ஏற்படும். மாணவ மாணவிகளுக்கு: பெற்றோர்களின் ஆதரவு குறைவால் கல்வித் தடைகள் ஏற்பட்டு அரசாங்க உதவியால் கல்வி உயர்வுகளும் ஏற்படும். ஆசிரியர் களுக்கு: உயாந்த பதவிகளும், ஆத ரவுகளும் ஏற்படும் வழக்கறிஞர் களுக்கு: எடுத்த வழக்குகளில் தாமத நிலைகள் ஏற்பட்டு பின்னர் வெற்றி காண்பதும் ஏறபடும். திரைப்பட முதலாளிகளுக்கு: விசேஷ இலாபங் கள், போட்டியின் மீது படங்கள் ஓட் டுவதும் உண்டாகும். பிரதி மாதம் ஞாயிற்றுக்கிழமை, செவ்வாய்க்கிழ மை உகந்த கிழமைகள். மேலும் வெற்றிக்கு வழிகாட்டும் கிழமைகள். 6,9,15,17,24,27 தேதிகள் மகிழ்ச்சி யைத் தரும தேதிகள். மார்ச்சு, ஜுன், செப்டம்பா, டிசம்பர் மாதங் களில் உயர்ந்த பதவிகள யோகங் கள் எதிர்பாராத தன் இலாபங்கள் ஏற்படும். வெண்மை நிற ஆடை கள் கோமேதகக் கற்களாலான ஆபரணங் கள் அணிவது வெற்றிக்கு உகந்தது, தெற்கு திசைப் பிரயாணங்கள் அனு கூலம் தரும். தடைப்படும் காலங் களில் புதனன்று விஷ்ணு சகஸ்ரநாம பாராயணம் 'புருஷ சூக்த பாரா யணங்கள், 'சக்திகவச' பாராயணம், சக்தி ஆலயத்தில் விளக்கு வைத்தல் ஆகியன உகந்தன.

## மிதுனம்

(மிருக சீர்ஷம் மிகுதி 2, திருவாதி ரை 4, புனர்பூசம் 3-ம பாதம் வரை)

இந்த ராசி நேயர்களுக்கு கௌரவ பதவிகள் ஆத்ம நண்பர்களால் அனு கூலங்கள் திடமான உறுதியும் நான்கு திசைகளிலும் புகழ் பெறுவ தும் உண்டாகும். உத்தியோகஸ்தர் களுக்கு: உயர்நத பதவிகள் அரசாங் கத்தின் மூலமாக வீட்டு மனைகள் ஏற்படுத்துதலும் உண்டாகும். உத்தி யோக மாற்றங்கள் கிழக்கு திசையில் ஏற்படும் வியாபாரிகளுக்குக் கூட் டுத் துறைகளில் வட்டி வியாபாரத் தில் முன்னேற்றங்கள் அதிகமாகும்; பொருள் சேர்க்கைகள் ஏற்படும். கட்டிட வியாபாரிகளுக்கு விசேஷ மான அனுகூலங்களும் ஏற்படும். கலைஞர்களுக்கு உயர்வான பதவிகள் புது விதமான ஆராய்ச்சிகள் மேற் கொள்ளுவதால் சக்தி அதிகரித்தல் பரிசுகளும் பெறுதல். பெரிய மேடை களில் பேசும் திறமையை மேற் கொள்ளுதல். விவசாயிகளுக்கு: புது விதமான பயிர்களைப் பயிர் செய்வ தால் அனுகூலங்கள் தண்ணீரின் ஆதாரங்கள் பூர்ணமாக ஏற்படுத லும் உண்டாகும். மங்கையர்களுக்கு: அவர்களின் மனம்போல் கணவன் மார்கள் கிடைப்பதும் தடைப்பட்ட திருமணங்கள் உடனே முடிவாகுதல் வாழ்க்கையில் புது மலர்ச்சிகளும் ஏற்படும். மாணவ மாணவிகளுக்கு நிரந்தரமான கல்விச்சுகங்களும் பெற் றோர்களின் ஆதரவுகளும் ஏற்படும். ஆசிரியர்களுக்கு: புது விதமான அனு கூலச் செய்திகளும் மன நிறைவுகளும் ஏற்படும். வழக்கறிஞர்களுக்கு புது விதமான பதவிகள் வீட்டைத் தேடி வருவதும் வாகன இலாபங்களும் வெளிநாடு செல்லக்கூடிய யோகங் களும் ஏற்படும். திரை அரங்க வினி யோகஸ்தர்களுக்கு: அவர்கள் ஏற் கும் முயற்சிகளில் வெற்றி காண்ப தும் உண்டாகும். பிரதி மாதம் 5, 14, 23 தேதிகளும் புதன், வெள்ளி கிழமைகளும் உகந்தனவாம். சாம்பல் நிற ஆடைகளையும் பச்சை கலர் டைமண்டு கல் ஆபரணங்களை யும் அணிவது நலன் தரும். மேற்கு திசைப் பயணங்களால் அனுகூலங்க ளும் உணடாகும். மே, பிப்ரவரி, நவம்பர் மாதஙகளில் விசேஷ யோகங் களும் உண்டாகும். தன் மனம்போல் அனைத்தும் நடக்கும். தடைகளுக்கு புதன் அன்று ''புருஷ சூக்தம்'' ''நாராயண சூக்தம்'' போன்ற பாரா யணங்களால் தடைகள் நீங்கும்; நன் மைகள் உண்டாகும்.

## கடக ராசி

(புனர்பூசம் மிகுதி 1, பூசம் 4, ஆயில் யம் 4 பாதங்கள் வரை)

இந்த ராசி நேயர்களுக்கு மூதா தையர்களுடைய சொத்துக்களின் சிக்கல்கள் தீரும். தகப்பனுருடைய பாக்கியத்தில் சகோதரர்களுடைய விரோதங்களால் சொத்துக்களை இழக்க நேரிடும். குல தெய்வத்தி னுடைய குறைவால் வயிறு சம்மந்த 'அல்சர்' போன்ற பிணிகள், பீடை கள் ஏற்படும். குடும்பத்தில் அமைதி குறைவுகள் இருந்துவரும். மனப்பீதி கள் ஏற்படும். இரவில் தூக்கமின் மையும் ஏற்படும். எந்நேரமும் சிந் தனைகள் சோர்வுகள் அதிகமாக இருப்பதும் ஏற்படும். உத்தியோகஸ் தர்களுக்கு மறைமுக எதிர்ப்புகள், மேல் அதிகாரிகளின் ஆதரவுகள் குறைவாகவும், குடும்ப சந்ததிகளின் அமைதி குறைவாகவுமிருக்கும். வியாபாரிகளுக்கு: அரசாங்க கான்டி ராக்டு வியாபாரிகளுக்குப் போட்டி களால் மனக்கசப்புகள் லாவாதேவி களில் இடையூறுகள் பணப் பற்றாக் குறை; கலைஞர்களுக்கு: பதவிகள் வரு வது போல் தோன்றி ஏமாற்றங்கள் காண்பதும் எதிர்ப்புகளால் மன அமைதி குறைவுகள் ஆராய்ச்சிகளில் அக்கறை குறைவால் தடைகள். விவசாயிகளுக்கு: திடீர் நஷ்டங்கள் அக்கம்பக்கம் வயல்கள் சம்பந்த தடைகளால் மனக்கவலைகள், எதிர்பு புகள், விரோதங்கள். மங்கையர் களுக்கு: குழந்தையில்லாதவர்களுக்கு வளர்ப்புக குழந்தைகள் சேர்க்கை சிலர் கருத்தடை செய்து கொள்ளு தல் குடும்பக் கஷ்டத்தில் புருஷன் மார்கள் மீதுள்ள சலிப்பால் மனச் சஞ்சலங்கள் அடைவதும் ஏற்படும். மாணவ மாணவிகளுக்கு: காலம் தவறி பள்ளிக்கு சென்று ஆப் ஸெண்ட் ஆவதும் தேர்ச்சிகளில் இடை யூறுகளும் ஏற்படும். ஆசிரியர்களுக்கு அலைச்சல்கள் அதிகமும் சந்தானம் மூலமாக கவலைகளும் அமைதியில்லாத வாழ்க்கையும் கவனக் குறைவால்

பணம் கை விடுதலும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு; வீண்பழிகள் மன அமைதி குறைவு வழக்குகளில் கவன மின்மையால் தொழில் தடைபடுவதும் ஏற்படும். திரைப்பட முதலாளிகளுக்கு: சமயத்திற்கு பணியாட்கள் உதவாமல் இடையூறுகள் போட்டிகள் மூலம் நஷ்டங்கள், அமைதி குறைவுகள் ஏற்படும். வடதிசைப் பயணங்களில் அனுகூலங்கள். பிரதிமாதம் 2, 3, 7, 9, 11, தேதிகள் செவ்வாய், வெள்ளி கிழமைகள் உகந்தன. மஞ்சள், பச்சை கலர் ஆடைகள் நீலக்கல் ஆபரணங்கள் அணிவது நலன். பிப்ரவரி, மார்ச்சு, ஜூலை, செப்டம்பர், நவம்பர் மாதங்களில் உயர் பதவிகள், எதிர்பாராத தன இலாபங்கள் தூர தேச பிராயாணங்கள் பந்து ஜன கல்யாண வைபவங்களுக்குத் தலைமை தாங்குவதும் உண்டாகும். தடைகளுக்கு தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனை வியாழன் அன்று செய்வதும் "மேதா சூக்தி" பாராயணங்கள் செய்வதாலும் தடைகள் நீங்கி நன்மைகள் உண்டாகும்.

## சிம்மம்

**(மகம் 4 பாதம், பூரம் 4 பாதம், உத்திரம் 1-ம் பாதம் வரை)**

இந்த ராசி நேயர்களுக்கு புதல்வர்கள் மூலமாகப் பதவிகள் கிடைப்பதும் "கொடுக்கின்ற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொடுக்கும்" என்பது போல பிள்ளைப் பேறு இல்லாதவர்களுக்குப் பிள்ளைப் பேறு உண்டாகுதல், சபைகளில் முதல் இடம் வகிப்பதும் உண்டாகும். ஆத்ம நண்பர்களுடைய உதவிகள் அதிகரிப்பதும் உண்டாகும். உத்யோகஸ்தர்களுக்கு பல நாளாக இருந்து வரும் பணச்சிக்கல்கள் தீருவதும் உண்டாகும். உத்தியோக உயர்வுகள் கல்வி இலாகாவில் பணியாற்றுபவர்களுக்கு விசேஷமான சலுகைகள் போன்ற முறைகளில் முன்னேற்றங்களும், கௌரவ பதவிகளும் உண்டாகும். வியாபாரிகளுக்குக் கூட்டு வியாபாரங்களில் எதிர்புகள் எதிர்பாராத நஷ்டங்கள் நண்பர்களின் போதனைகள் "மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கியது" போல்தான் உண்டாகும். கலைஞர்களுக்கு: பலநாளாக அரங்கேற்றமாகாத கலைஞர்கள் திடீரென அரங்கேறுவதால் பரிசுகள், தன இலாபங்களும் உண்டாகும். விவசாயிகளுக்கு புஞ்சை தான்யங்களில் விசேஷ பலன்களும் கடலைக் காய், கடலெண்ணெய் போன்றவற்றில் விசேஷ தன இலாபங்களும் உண்டாகும். மங்கையர்களுக்கு: இவர்களுடைய வீணை பேச்சு வார்த்தைகளால் தானாக தூண்டில் அகப்பட்ட மீன் போல் அகப்பட்டுத் திகைப்பார்கள். தோழிகள் போதனைகளால் மந்தரையால் கைகேயி மனனை பகைத்துக் கொண்டது போல் இவர்கள் நிலை மனளன் வசம் ஆகும். மாணவ மாணவிகளுக்கு: கல்விகளில் அதிக அக்கறை காட்டுவார்கள். பள்ளிகளில் விசேஷ சலுகைகளும் முன்னேற்ற வழிகளும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு: இவர்களின் திறமைகளால் வழக்குகளில் வெற்றி பெறுவது நீதிபதிகள் போன்ற உயர்ந்த பதவிகளும் உண்டாகும். ஆசிரியர்களுக்கு: முன்னேற்றமான வாழ்க்கை உழைப்புகள் அதிகம் பொருள் இலாபங்கள் பாராட்டுக்களில் முதலிடம் வகிப்பதும் ஏற்படும். திரைப்பட முதலாளிகளுக்கு புதுவிதக் கொட்டகைகளை விலைக்கு எடுப்பது தன இலாபங்கள், மேன்மேலும் செல்வம் பெருகுதல். தென் கிழக்கு திசை பயணங்களில் அனுகூலங்கள். பிரதிமாதம் 2, 3, 7, 9 தேதிகள் நல்லன. புஷ்பராகக் கல் ஆபரணம், வெண்மை, சிகப்பு கரைகளுள்ள ஆடைகள் அணிவது நலன். ஞாயிறு, திங்கள், புதன் கிழமைகள் அனுகூலமானவை. பிப்ரவரி, மார்ச்சு ஜூலை செப்டம்பர் ஏப்ரல் மாதங்களில் யோகங்கள் செல்வச் சேர்க்கைகள் வாகனாதி இலாபங்கள் உண்டாகும். தடைகளுக்கு ஞாயிறன்று ஆஞ்சநேயர் கோவிலுக்கு தீபம் ஏற்றுதல் ஜன்ம நட்சத்திரம் அன்று வடைமாலை போடுவதால் விசேஷ அனுகூலங்கள் உண்டாகும்.

## கன்னி

**(உத்திரம் மிகுதி 3, அஸ்தம் 4, சித்திரை 2-பாதம் வரை)**

இந்த ராசி நேயர்களுக்கு குடும்பச் சிக்கல்கள், பெண்களின் அபவாதங்கள், வீண் நஷ்டங்களும் உண்டாகும். எதிர்பாராமல் செல்லக்கூடிய பயணங்களால் அலைச்சல்கள் உண்டாகும். வலது கண்ணில் வியாதிகளும் புத்தி பிரமைகளும் ஏற்படும். உத்யோகஸ்தர்களுக்கு மேலதிகாரிகளின் ஆதரவுகள் பூமி வாகனங்கள் ஏற்படுதலும் புதல்வர்களுக்குக் கல்விச் சலுகைகளும் உண்டாகும். வியாபாரிகளுக்குக் கூட்டு வியாபாரங்களில் தன இலாபங்கள் மணிலா எண்ணெய் வித்துக்கள் தொழில்களில் இலாபமும் உண்டாகும். கலைஞர்களுக்கு நிரந்தரமான கலைகளை மேற்கொள்ளுவதும் புதிய ஆராய்ச்சிகளில் தனிக் கவனம் செலுத்துவதும் புதிய ஆராய்ச்சிகளில் வெற்றி பெறுவதும் உண்டாகும். விவசாயிகளுக்கு: புதிய விவசாயத் தொழில்களில் மேன்மை காண்பதும் டிராக்டர்கள் இல்லாதவர்கள் டிராக்டர் வாங்குவதும் உண்டாகும். மங்கையர்களுக்கு தோழிகள் போதனைகள் மந்தரையின் போதனையால் கைகேயி மனளனை பகைத்து துயரத்தை அடைந்தது போல்தான் இவர்களின் நிலை. மக்களால் மட்டும் அமைதி காணலாம். மாணவ மாணவிகளுக்கு: உயர் கல்விகளுக்கு ஆதரவுகள் கிடைப்பதும் தேர்வுகளில் முதலிடம் வகிப்பதும் உண்டாகும். ஆசிரியர்களுக்கு பள்ளிகளில் அமைதியின்மை, குடும்பக் கவலை, மக்களால் மனக்குறைகள். புதிய வாய்ப்புகளுக்கு இடையூறுகள், எதிர்ப்புகள் தலைமை ஆசிரியர்களால் அமைதியின்மைகள். வழக்கறிஞர்களுக்கு: புதிய கடுமையான சிக்கலான வழக்குகளில் வெற்றி காண்பது. தலைமைப் பதவிகளில் முதலிடம் வகிப்பதும்

(46-ம் பக்கம் பார்க்க)

# தி. தி. தே. மேலாண்மைக் குழு முடிவுகள்

**அண்மையில் திருமலையில் கூடிய மேலாண்மைக் குழு கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட முக்கிய முடிவுகள் பின்வருமாறு !**

திருமலையில் கோயிலுக்கெதிரில் இருந்த ஆயிரங்கால் மண்டபத்தின் ஒரு பகுதி பிரிக்கப்பட்டுள்ளது. முழுவதும் பிரிக்கப்பட்ட பின்னர், அம்மண்டபத்தை யாத்திரிகர்களின பார்வைக்காக மறுபடியும், திருமலையில் வேறொரு இடத்தில், நிருமாணிப்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

ஆந்திராவில் பதிவு செய்யப்பட்ட நூலகங்களுக்கு இலவசமாக தி. தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட சமய நூல்களை வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

ரூ. 15 இலட்சம் செலவில் ஆந்திர மாநிலத்தில் அதிலாபாத்தில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபம் ஒன்றினைக் கட்டுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

உத்திரபிரதேசம் ராஜ்பூரைச் சேர்ந்த ஸ்ரீ ஸ்ரத்தானந்த ஆஷ்ரமத்தார் பரிசாக தந்த சொத்துக்களை தி. தி. தே. ஏற்றுக்கொள்வதென்று குழு முடிவு செய்துள்ளது.

ஹைதராபாத்தில் பாலாஜி பவன் (தி. தி. தே. தகவலறிவிப்பு நிலையம்) அருகே திருமண மண்டபக் கட்டிடத் தொகுதி ஒன்றினைக் கட்டுவதாக குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

16-12-83 முதல் 14-1-84 வரை திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலில் தனுர் மாதம் முன்னிட்டு, ஸுப்ரபாதத்திற்குப் பதிலாக ஆண்டாளின் திருப்பாவைப் பாடல்கள் பாடப்படும்.

ஃ ஃ ஃ

திருப்பதியிலுள்ள ஒரே சிவன் கோயிலான தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வர சுவாமி கோயிலின் (ஆழ்வார் தீர்த்தம்) தெப்போற்சவம் விழா 18-12-83 முதல் 20-12-83வரை வெகுவிமர்சையாகக் கொண்டாடப்படும். ஆர்த்ரா தர்சனோற்சவம் 21-12-83 அன்று நடைபெறும்.

★

12-11-83 அன்று திருமலைக் கோயிலில் வருடத்திற்கு ஒரு முறை நடைபெறும் 'புஷ்ப யாகம்' நடைபெற்றது. இவ்வுற்சவத்தில் தலா ரூ. 3,500/- செலுத்தி 15 கிருஹஸ்தர்கள் பங்கு பெற்றனர். ரூ. 2,000/- செலுத்தி 7 கிருஹஸ்தர்கள் பங்கேற்ற ஸகஸ்ர தீபாங்கார சேவையும் நடைபெற்றது. 12-11-83 அன்று கோயில் வருமானம் ரூ. 5.5 இலட்சமாகும்



(44-ம் பக்கத் தொடர்ச்சி)

உண்டாகும். திரைப்பட முதலாளி களுக்கு உயர்வான பதவிகள் தானு கத்தேடி வருவதும் திரையரங்கங்கள் முன்னேற்றங்கள் அடைவதும், தன இலாபங்கள், எந்தக் காரியத்திலும் முழுமையாக வெற்றிகள் அடைவ தும் உண்டாகும். பிரதிமாதம் 3, 7, 9 தேதிகள் நன்மை தரும். செவ் வாய், புதன் கிழமைகள் உகந்தன. பச்சைக்கல் ஆபரணங்கள் சிமெண்ட் (அ) யானை கலர் ஆடைகள் அணிவது நலன் தரும். மார்ச்சு, ஏப்ரல், ஜூலை செப்டம்பர் ஆகிய மாதங்களில் யோகங்களும் வெளிநாடுகள் சென்று பதவிகள் பெறுவதும் 'எதிர்பாராத இலாபங்கள் அடைவதும் ஏற் படும். தடைகளுக்கு 'துர்கா சூக் தம்' 'துர்கா கவசம்' பாராயணங் கள் செய்வது அல்லது துர்கா ஆல யத்தில் நெய் விளக்கு ஏற்றுவதால் தடைகள் நீங்கி நன்மை உண்டாகும்.

## துலா

(சித்திரை மிகுதி 2, சுவாதி 4, விசா கம் 3 பாதங்கள் வரை)

இந்த ராசி நேயர்களுக்குப் பதவி கள் வகிப்பது புதல்வர்களுக்கு உயர் வான பதவிகள் புதல்விகளுக்கு வாழ்க்கை சம்பந்த கவலைகளால் மன வேதனை அடைவதும் மேற்கு திசை பயணங்களில் அனுகூலங்களும் உண் டாகும். உத்தியோகஸ்தாகளுக்கு மறைமுக எதிர்ப்புகளால் திடீர் மாற்றங்கள் வசதியில்லா இடத்தில் மாறுதல் கிடைத்து தடைகள் உண் டாக்குதலும் ஏற்படும். வியாபாரி களுக்கு: கூட்டு வியாபாரங்களில் மன மாற்றங்கள் விரோதங்கள் அடைவ தும் பலசரக்கு வியாபாரங்களின் முதலாளிகள் உயர்வான பதவிகள் அடைவதும் உண்டாகும். கலைஞர் களுக்கு: போட்டிகளில் ஈடுபாடு, வெற்றிகள் அடைவதும் பரிசுகள் பெறுவதும் உண்டாகும். விளையாட்டு வீரர்களுக்கு முன்னேற்றங்களும், ஓட்டப் பந்தயங்களும் முதலிடம் வகிப்பதும உண்டாகும். விவசாயி களுக்கு: இயந்திர கருவி களால் திடீர் நஷ்டங்கள் உண் டாகும். தண்ணீர் சம்பந்தப் பட்ட குறைவுகளால் பயிர் நஷ் டங்கள் அடைவதும் உண்டாகும். மாதர்களுக்கு: கணவனால் அமைதி குறைவுகள், மக்களாலும் மன அமைதி குறைவுகள. புதிய ஆடைகள் வாங்க ஆசைப்பட்டுத் தடைகள் ஏற்படும்: மாணவமாணவிகளுக்கு பள்ளிகளில் சலசலப்பும், அதனால் துன்பங்களும் ஏற்படும். ஆசிரியர்களுக்கு: உயர்வு களுக்குத் தடைகள, பள்ளிகளில் எதிர்பாராமல் அதிக வேலைகள் ஏற் பட்டு அலைச்சல்களும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு, வழக்குகளில் வெற்றிகள் காண்பதும் பொதுநலத் துறையில் பதவிகள ஏற்படுவதும் உண்டாகும். திரையரங்க முதலாளி களுக்கு புதியதிரைப்படங்கள் போடு வதும் லாபத்தின் மேல் லாபத்தை அடைவதும் உண்டாகும். பிரதி மாதம் 5, 8, 14, 17 தேதிகளும் செவ்வாய், வெள்ளிக்கிழமைகளும் யோகம் உண்டாக்கும் கிழமைகள் ஆகும். நீலக்கல் ஆபரணங்கள், மாதுளம் கலர் ஆடைகள் அணிவது உகந்தது. மார்சசு, மே, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் விசேஷ யோகங்களும் எதிர்பாராத பண இலாபங்களும், இராஜ்ய இலாபங்க ளும் உண்டாகும. தடைகளுக்கு வெள்ளிக்கிழமையன்று சக்தி கண பதி ஆலயத்திற்கு நெய்தீபம் ஏற்று வதால் தடைகள நீங்கி நன்மைகள் உண்டாகும்.

## விருச்சிகம்

(விசாகம் மிகுதி 1 அனுஷம 4, கேட்டை 4 பாதங்கள் வரை)

இந்த ராசி நேயர்களுக்குக் குடும் பத்தில் மன ஆறுதல்கள், சுப காரியங் கள் ஆகாராதி விஷய தவறுகளால் உடல் அநாரோக்யங்கள ஏற்படுதல், நண்பர்கள் குடும்பத்திற்கு உழைப்ப தும் ஏற்படும். உத்யோகஸ்தர் களுக்கு உயர்வுகள், வசதிக்கு ஏற்ற இடத்தில் பிரமோஷன்களுடன் மாற் றங்கள் ஏற்படுதல தன இலாபங்க ளும் உண்டாகும். வியாபாரிகளுக்கு: புதுமுயற்சிகளால் லாபத்தைக்காணு தலும் கவரன்மெண்டு காண்டிராக்டு வியாபாரிகளுக்கு போட்டிகள் மீது லாபங்களும் உண்டாகும். கலைஞர் களுக்குப் புது முயற்சிகளில் வெற்றி கள் தானுக தேடி வருவதும் புகழும் உணடாகும். வெளியூர் பிரயாணங் கள் செல்வதும் உண்டாகும். விவ சாயிகளுக்கு எருக்கள் மூலமாக தாமதநிலை, மோட்டார் பம்புகள் பழுது பார்ப்பதில் நஷ்டங்களும் உண்டாகும். மங்கையர்களுக்கு மனு என மனக்கவலைகள் உண்டாகும். சில்லரை மனஸ்தாபங்கள், உடல் சுகங்கள் குறைவு, புது மணத் தம்பதி களுக்கு சில்லரை மனஸ்தாபங்களும் உண்டாகும். மாணவ மாணவிகளுக்கு உகநத பலன்கள் நன்மையாகவே நடந்து வரும். ஆசிரியர்களுக்கு அதி சயமான செய்திகளை கேட்பதும் மன அமைதிகள், புதிய ஆராய்ச்சிகளில் வெற்றிகள் காண்பதும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு எதிலும் முழு வெற்றிகளும் புதிய தோற்றங்களும் அனுகூலமான பலன்களும் நடந்து வரும். திரைப்பட முதலாளிகளுக்குத் திரைப்படங்களில் லாபங்களும் மன அமைதிகளும் உண்டாகும். பிரதி மாதம் 3, 6, 8, 12, 15, 17 தேதிகளில் நல்ல பலன்கள். செவ்வாய், வெள்ளிக் கிழமைகளும் உகந்தது. ஆரஞ்சு கலர் ஆடைகள் பவழக்கல் ஆபரணங் கள் அணிவது நலன். மார்ச்சு, ஜூலை, ஆகஸ்டு, டிசம்பர் மாதங் களில் நண்பர்களால் தன இலாபங் கள், யோகங்கள், கடல் கடந்து தென்திசை பயணங்களில் அனுகூலங் களும் உண்டாகும். தடைகளுக்கு முருகன் கோவிலில் 'செவ்வாயன்று நெய் விளக்கேற்ற நலன்கள் உண்டா கும்.

### தனுசு

(மூலம் 4, பூராடம் 4, உத்திராடம் முதல் பாதம் வரை)

இந்த ராசி நேயர்களுக்கு உயர்ந்த கௌரவமான பதவிகள் தானகவே தேடிவரும். புதிய பூமிகள் வாங்குதல் கட்டிடங்கள் கட்டுவதும் கிணறுகள் போன்ற ஜல சம்மந்த வேலைகள் ஆரம்பித்தலும் உண்டாகும். உத்தியோகஸ்தர்களுக்குப் பூர்வீகசொத்துக்களின் சிக்கல்கள் தீர்ந்து மன ஆறுதல்கள் கிடைக்கும். தகப்பனர் மனக் கவலைகள் உண்டாகும். வியாபாரிகளுக்குப் பெருத்த தன இலாபங்கள் வியாபார சம்பந்தப்பட்ட விஷயங்களில் பயணங்கள் மேற்கொள்ளுவதும், சிமிண்ட் கட்டட சம்மந்த வியாபாரங்களில் தன இலாபங்களும் உண்டாகும். கலைஞர்களுக்குப் புதிய மகிழ்ச்சிகள் உண்டாகுதலும் பரிசுகள், திருமண வாழ்வில் சுகங்கள் சிலருக்கு ஏற்படும். விவசாயிகளுக்கு பூர்ணமான விவசாய லாபங்கள், வாழைகிழங்கு சவுக்கு போன்ற புஞ்சைப் பயிர்களில் தன லாபங்களும் ஏற்படும்; மாதர்களுக்கு: பல காலமாக வேற்றுமைப்பட்ட கணவன் திருந்தி வருதல், மணவாழ்க்கை அமைதி பெறுதல். ஆடை ஆபரணங்கள் சோகையும் உல்லாச பயணங்களும் ஏற்படும். மாணவ மாணவிகளுக்குப் பள்ளித்தேர்வுகளில் தேர்ச்சிகள் பெறுவதும் போட்டிகள் விளையாட்டுகளில் வெற்றி பெறுவதும் உண்டாகும். ஆசிரியர்களுக்கு உயர்ந்த பதவிகள், சுயமாக பத்திரிகைகள் நடத்துவதும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு வழக்குகளில் வெற்றி, தூர தேச பிரயாணங்கள் செல்வதும் உண்டாகும். திரைப்பட விநியோகஸ்தர்களுக்கு அலைச்சல்களும், பயணங்கள் அதிகமாக செல்வதும் உண்டாகும். பிரதிமாதம் 4,7,8, 13,16,17 தேதிகளும் வெள்ளி, குரு கிழமைகளும் அனுகூலமானவை. மஞ்சள் கலர் ஆடைகள் புஷ்பராகக் கல் ஆபரணங்கள் அணிவது அனுகூலம் தரும். ஏப்ரல், ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் யோகம் உண்டாகும், தடைகளுக்கு வியாழனன்று பைரவருக்கு அர்ச்சனை செய்வதால் தடைகள் நீங்கி நன்மைகள் ஏற்படும்.

### மகரம்

(உத்திராடம் மிகுதி 3, திருவோணம் 4, அவிட்டம் 2 பாதம் வரை)

இந்த ராசி நேயர்களுக்குப் பொதுத்துறையில் பதவிகள் நிதி சாசனத்தில் டைரக்டர்களாக ஏற்படுத்திக் கொள்வதும் உடன்பிறப்புக்களால் மனக் கவலைகளும் புத்தி சஞ்சலங்களும் வயிறு சம்பந்தப்பட்டக் கோளாறுகளும் அதற்கு மருத்துவ சிகிச்சைகள் கொடுக்கும் நிலையும் ஏற்படும். உத்யோகஸ்தர்களுக்கு உயர்வுகள், மேலதிகாரிகளின் ஆதரவுகள் கல்வி இலாகாவில் பணி புரிபவர்களுக்கு விசேஷ உயர்வுகளும் சலுகைகளும் ஏற்படும். வியாபாரிகளுக்கு உயர்ந்த வியாபாரிகளின் கூட்டுகளால் விசேஷமான முன்னேற்றங்கள் லாவா தேவிகளில் உயர்ந்ததாகுதல் வட்டி வியாபாரிகளுக்கு முன்னேற்றங்கள் அதிகரித்தல். கலைஞர்களுக்கு உயர்ந்த பதவிகள புது விதமான ஆராய்ச்சிகள் மேற்கொண்டு புகழை அடைவதும் உண்டாகும். விளையாட்டு வீரர்களுக்கு எதிலும் வெற்றிகள் உண்டாகும். மாதர்களுக்கு: தோழிகள் வார்த்தைகளால் உயிருக்குயிராக இருக்கும் சிநேகிதிகளை பகைத்துக் கொள்ளுவது மனளுல் அபகீர்த்திகள் பெறுவதும் புதல்விகளால் கவலைகளும் உண்டாகும். விவசாயிகளுக்கு மோட்டார் பம்பு செட்டுகளால் திடீர் நஷ்டங்கள் ஏற்பட்டு பிறகு விவசாயம் அனுகூலம் கிடைக்கும். மாணவ மாணவிகளுக்கு: பள்ளிகளுக்குக் காலத்தில் செல்ல இடையூறுகள் ஏற்பட்டு தேர்ச்சிகளில் இடையூறுகள் ஏற்படும். ஆசிரியர்களுக்கு உயர்ந்த பதவிகள் பெறும் நேரத்தில் புது வெள்ளம் பழைய வெள்ளத்தை அடித்துக் கொண்டு போவது போல் இடையூறுகள் ஏற்படும். வழக்கறிஞர்களுக்கு வழக்குகளில் வெற்றி, வெளியூர் வழக்குகளுக்கு ஒய்வு கிடைக்காமல் சென்று வெற்றி அடைவதும் உண்டாகும். திரைப்பட

முதலாளிகளுக்குப் புதிய திரையரங்கங்கள் கட்டும் வாய்ப்புகள் அதிகரித்தல் அனுகூலமான செய்திகள் கிடைக்கும். பிரதிமாதம் 3,6,8,9 தேதிகள் சனி, திங்கள் கிழமைகள் உகந்தன. பிஸ்கட் கலர் ஆடைகள் நீலக்கல் ஆபரணங்கள் அணிவது சகலவிதமான அனுகூலத்தைத் தரும். மார்ச், ஜூன், ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் கடல் கடந்து மேற்கு திசை பயணங்கள் அடிக்கடி செல்வதும் தன லாபம் கௌரவம் போன்ற பலன்கள் அடைவதும் ஏற்படும். தடைப்பட்ட காலங்களில் பிரதி சனியன்று சனி பகவானுக்கு எள்ளு, வெல்லம் நிவேதனம் செய்வதும் சாஸ்தாவுக்கு நெய் விளக்கு ஏற்றுவதும் நன்மைகள் தரக்கூடும்.

## கும்பம்

(அவிட்டம் மிகுதி 2, சதயம் 4, பூரட்டாதி 3 பாதம் வரை)

இந்த ராசி நேயர்களுக்கு குடும்ப சுகங்கள், சுப காரிய செலவினங்கள் வாக்கு செல்வாக்கு, வாசனத்வத்தால் தன லாபங்கள் அடைவதும் உண்டாகும். உத்யோகஸ்தர்களுக்கு: வேலைகள் அதிகரித்தல் மன அமைதி குறைவுகள் மேலதிகாரிகளின் இடையூறுகள் மக்களின் குறைவுகளும் ஏற்படும். வியாபாரிகளுக்கு: பல சரக்குக் கடை வினியோகஸ்தர்களுக்கு போட்டிகளால் வீண் செலவினங்கள் மன மாற்றங்கள் வெளியூர் வியாபாரத்தால் அலைச்சல்கள் அதிகரித்தலும் உண்டாகும். கலைஞர்களுக்கு: உயர்ந்த பதவிகள் அடைவது புதிய கலை கவிகள் நூல்கள் இயற்றி அதன் மூலம் தன இலாபம் அடைவதும் உண்டாகும். விவசாயிகளுக்கு: உயர்வுகள் மணிலா, கடலைகாய் பயிர்கள் உயர்வுகள், தன இலாபங்கள் அடைவதும் உண்டாகும். மாதர்களுக்கு: தடைப்பட்ட மண வாழ்க்கை நடந்து விடும். மனத்திற்கேற்ற மணாளனை அடைய நேரும். மண வாழ்க்கை இன்னிமையானதாகவே நடந்து வரும். மாணவ மாணவிகளுக்கு: கல்விகளில் விசேஷ தேர்ச்சிகள் அடைவதும் புது விதமான முயற்சிகளில் வெற்றி அடைவதும் தாய் தந்தையர்களின் ஆதரவுகள் அதிகரித்தலும் ஏற்படும். ஆசிரியர்களுக்கு: மகிழ்ச்சிகரமான செய்திகள் மனம் போல் யாவும் நடைபெறுதல் மலர்ச்சியான வாழ்க்கைகளும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு: வாதத்தால் விசேஷ உயர்வுகள், வெற்றிகள் காண்பதும் குடும்பத்தில் அமைதி குறைவுகள் தகப்பனார் மூலமாக தன சேர்க்கைகளும் உண்டாகும். திரைப்பட முதலாளிகளுக்கு உயர்ந்த அனுகூலங்களும் உண்டாகும். பிரதி மாதம் 1, 10, 19, 28 தேதிகளும், சனி, வியாழன் கிழமைகளும் அனுகூலமானவை. ஆகாய கலர் ஆடைகள் கரு நீலக்கல் ஆபரணங்கள் அணிவது நலன். மார்ச், மே, ஜூன் மாதங்களில் விசேஷ உயர்வுகள் எதிர் பாராத நிகழ்ச்சிகளும் ஏற்படும். தடைகளுக்கு 'சிவகவச' பாராயணத்தாலும் சனி வார விரதங்களாலும் தடைகள் நீங்கி நலன்கள் ஏற்படும்.

## மீனம்

(பூரட்டாதி மிகுதி 1, உத்திரட்டாதி 4, ரேவதி 4 பாதங்கள் வரை)

இந்த ராசி நேயர்களுக்கு குடும்பம், இட மாற்றங்கள், அடிக்கடி உடல் அசௌகயங்கள் மாதர்களால் வீண் பழிகள் மன அமைதி குறைவுகள் அடிக்கடி பிரயாணத் தடைகள். உத்தியோகஸ்தர்களுக்கு: உயர்வான பதவிகள் திடீர் மாற்றங்கள சுப காரியங்கள் தன விரயங்கள் பொருள் சேர்க்கைகளும உண்டாகும். வியாபாரிகளுக்கு: கான்டிராக்டு, வடடிக கடை வியாபாரிகளுக்கு உயர்ந்த பதவிகள் தலைமைப் பதவிகள் தன இலாபங்கள் வெளியூர் பிரயாணங்களும் உண்டாகும். கலைஞர்களுக்கு: உயர்ந்த பதவிகள் தலைமை வகிப்பது, பரிசுகள் பெறுவதும் உண்டாகும். விவசாயிகளுக்கு: விவசாயத்தில் லாபங்கள், இருப்பிடம் விட்டு வெளியிடத்திலும் விவசாயம் செய்ய நேரிடும். அதனால் லாபத்தை அடைவதும் உண்டாகும். மாதர்களுக்கு: பிள்ளை குறையுள்ளவர்களுக்கு புத்திர லாபம் கிடைப்பதும் மணாளனின் சுகங்கள், ஆதரவுகள் புது ஆபரண சேர்க்கைகள் பட்டாடைகள் கிடைப்பதும் உண்டாகும். மாணவ மாணவிகளுக்கு: உயர்ந்த சலுகைகள் தன லாபத்தை பெறுதல் பள்ளிகளில் பரிசுகள் பெறுதல் கல்வித் தேர்வுகளில் வெற்றியடைவதும் உண்டாகும். ஆசிரியர்களுக்கு: உயர்ந்த வாழ்க்கை, சம்பளங்கள் உயர்வாகுதல், எண்ணம் போல் யாவும் நடப்பதும் உண்டாகும். வழக்கறிஞர்களுக்கு: அலைச்சல்கள் வெளியூர் பிரயாணங்கள், காலம் தாழ்த்தி அகால போஜனங்களால் உடல்ஆரோக்கியக்குறைவுகளும் ஏற்படும். திரைப்பட முதலாளிகளுக்கு: அனுகூலங்கள் அதிகமாகுதல் போன்ற பலன்கள் ஏற்படும். பிரதி மாதம் 3, 12, 21, 30 தேதிகளும் வியாழன், புதன் கிழமைகளும் அனுகூலமானவை. சந்தனக் கலர் ஆடைகள், புஷ்பராகக் கல் ஆபரணங்கள் அணிவது உகந்ததாகும். ஜனவரி, ஏப்ரல், செப்டம்பர், நவம்பர் மாதங்களில் உயர்வான வாழ்க்கை ஏற்படும். தடைகளுக்கு வியாழனன்று "ஸ்ரீ சூக்த" பாராயணங்கள் செய்வதால, கடலோரை நிவேதனம் செய்வதால் தடைகள் நீங்கி நன்மைகள் உண்டாகும். ★

---

முன் அட்டைப் படம் :

திருமலையில் உற்சவமூர்த்தி.

பின் அட்டைப படம் :

மலர் கைவேலைப்பாடு (திருமலை பிரம்மோற்சவம).

முதல் உள் அட்டைப் படம் :

திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜசுவாமி கோயில் தெப்போற்சவம்.

2-வது உள் அட்டைப் படம் :

ஸ்ரீநிவாசா மங்காபுரம் கோயில் பிரம்மோற்சவக் காட்சி.

---

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

